ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

**ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் ஸ்ரீமடம் சமஸ்தானம்**

காஞ்சீபுரம்

முகாம் : திருப்பூர். தேதி : 29–4–82



# ஸ்ரீ முகம்

பல அறநூல்களை எழுதி வரும் நஜன், 'தெய்வம் பேசுகிறது, என்ற தலைப்பில் ஆசார்யர் பேசுகிருர் என்று ஆசார்யர் உபதே சத்தையும்—கணபதி பேசுகிருர் என்ற தலைப்பில் விநாயகர் தத்து வங்களையும்—சூரியன் பேசுகிருர் என்ற தலைப்பில் சூரியன் தத் வத்தையும்—இறைவன் பேசுகிருர் என்ற தலைப்பில் சிவனுடை தத்துவத்தையும் இது போன்று இன்னும் பல விஷயங்களையும் இ_ர் நூலில் குழந்தைகள் தாங்களே படித்து தெரிந்துக் கொள்ளும் பட் எழுதி இருக்கிருர்.

எல்லோரும் இது போன்ற நல்ல நூல்களை வாங்கிப் படி— பயன் அடையுமாறு ஆசீர்வதிக்கின்ருேம். 4.

நாராயணஸ்மிர

# தெய்வம் பேசுகிறது

(ஷண்மத தெய்வங்கள், தங்களைப் பற்றி குழந்தைகளிடம் பேசுகின்றனர்).

[ஷண்மத தெய்வங்களின் கவசங்களுடன்

ஆசிரியர்
''ஸ்ரீ வித்யா ஞான பாஸ்கரா''
''ஸ்ரீ வித்யா காமதேனு''
''நஜன்''
(எஸ். நடராஜன்)



பிரதிபா பிரசுரம்
துவக்கம் : நவராத்ரி 1978.

பிரசுரித்தவர்
என். லலிதாம்பாள்
பிரதிபா பிரசுரம்
39, ...டம் தெரு, மயிலாப்பூர், சென்னை-600 004.
Phone : 74720

...யுள்ளது] [விலை ரூ. 6-00

தெய்வம் பேசுகிறது

முதற்பதிப்பு — ஏப்ரல் 1982

விலை : ரூ. 6-00



66

## பொருளடக்கம்



---

### வாசகர்களுக்கு ஓர் வேண்டுகோள்

புத்தகம் வாங்க விரும்புபவர் புத்தக விலையை மணியார்ட செய்யவும். புத்தகம் வி. பி. யில் வரும்போது தபால் செலவு டிப் பெறவும். புத்தகம் பத்திரமாக கிடைக்க இதுவே வழி.

---

லக்ஷ்மிராஜ் பிரிண்டர்ஸ், ராயப்பேட்டை, சென்னை-60001

# சமர்ப்பணம்



எங்களுடைய புத்தக வெளியீட்டு யக்ஞத்தை, மகிழ்ச்சி யுடன் ஆதரித்து, ஊக்குவித்து வருபவர் கோவிலூர் ஆதீன ஸ்ரீலஸ்ரீ மஹா சந்நிதானம்

**ராமநாத சுவாமிகள் அவர்கள் திருவடிகளுக்கு,**

## "தெய்வம் பேசுகிறது"

என்ற இந்த நூலை அன்புடன் சமர்ப்பிக்கின்றோம்.

ஏப்ரல் 1982,
சென்னை-4.

பிரதிபா பிரசுரத்தினர்.

# பதிப்பாசிரியர் நன்றி

சின்னஞ் சிறிய குழந்தைகளுக்காக ஆசிரியர் 'நஜன்' அவர்கள் எழுதிய 'தெய்வம் பேசுகிறது' என்ற நூல், பிரதிபாவின் 66-வது புத்தகமாக வெளிவந்திருக்கிறது.

66 என்ற எண்ணைக் கூட்டினுல் (6+6) = 12. ஆறு ஆதாரங்களையும், மூன்று மண்டலங்களையும், மூன்று க்ரந்திகளையும் கடந்த நிலையில், பன்னிரு கமலத்தில் மாதா, பிதா, குரு, தெய்வமாக அமர்ந்திருக்கும், அழிவற்ற பரம் பொருளான அன்னை பராசக்தியையே குறிக்கும்.

வளரும் சமுதாயத்தில் சிறு குழந்தைகள் சீரோடும், சிறப்போடும் வாழ, தெய்வத்தின் துணை மிகவும் அவசியம். அறம் ஒற்றைக் காலிலே நிற்கும் இந்த உலகில், குழந்தைகளுக்கு தெய்வ உணர்வுகளை உணர்த்துவதற்காக வேண்டி நாங்கள் எடுத்துக்கொண்ட முயற்சியின் பயனே இந்த சிறு புத்தகம்.

இதனை சிறுவர்கள் மட்டுமன்றி, பெரியவர்களும் ஆழ்ந்து படித்து, சிந்திக்கும் வகையில், ஷண்மத தெய்வங்களும் தங்களைப் பற்றி தாங்களே கூறுவது இந்தப் புத்தகத்தின் சிறப்பு அம்சமாகும்.

எங்கள் புத்தகப் பணியை உள்ளன்புடன் ஊக்குவித்து வருபவர் கோவிலூர் ஸ்ரீலஸ்ரீ ராமநாத சுவாமிகள். அவருக்கே இப்புத்தகத்தை காணிக்கையாக்கி யிருக்கின்றோம். இப்புத்தகத்துக்கு முகவுரை கொடுத்துதவிய போரசிரியர் ஸ்ரீ பாலகிருஷ்ணன் அவர்களுக்கு எமது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அருளாசி வழங்கியுள்ள மஹான்களுக்கு எங்களது நமஸ்காரங்கள்.

எங்கள் பணியில் பங்கு கொண்டு, பணியாற்றிவரும் நண்பரும், சிஷ்யருமாகிய ஸ்ரீ வித்யா ராஜகோபாலனுக்கு ஷண்மத தெய்வங்களின் அருள்கிடைக்கப் பிரார்த்திக்கின்றோம்.

இப்புத்தகத்தின் அட்டைப்படத்தை அழகாக எழுதிக் கொடுத்த ஸ்ரீ சுபா அவர்களுக்கும். நல்ல முறையில் அச்சிட்டுக் கொடுத்த ஸ்ரீ லக்ஷ்மிராஜ் பிரிண்டர்ஸ் அவர்களுக்கும் எமது உளங் கனிந் நன்றி.

"உயிர்களிடத்தில் அன்பு வேணும் ;— தெய்வம்
உண்மை யென்று தானறிதல் வேணும் ;
வயிரமுடைய நெஞ்சு வேணும் ;—இது
வாழும் முறைமையடி பாப்பா.

26—4—82

அக்ஷய திருதியை, என். லலிதாம்பாள்

சென்னை-600 004.

3-1

# முகவுரை

பேராசிரியர். எஸ். பாலகிருஷ்ணன்,
M.A. (Eng), M.A. (Soc), M.A. (PHIL) B.Com., B.L ,
Principal, ACME Correspondence College.
MADRAS-600 001 MADURAI-625019
and VIJAYAWADA-520003

பெரியவர்களுக்காகவே, இதுவரை எண்ணற்ற நூல்களை எழுதித் தந்த 'நஜன்' இப்போது, சிறுவர்களுக்காக பெரிய விஷயங்களைப் பக்குவமாக, எழுத ஆரம்பித்துள்ள வரிசையில் 'தெய்வம் பேசுகிறது' முதல் நூலாகத் திகழுகிறது. இது முதல் நூல் மட்டுமல்ல, முதன்மையான நூல்.

ஏற்கனவே, தமிழ் நல்லுலகத்தில் பெரிய தத்துவங்களையும், போதனைகளையும் குழந்தைகளுக்குச் சொல்வதுபோல, குழந்தைகளுக்கும், பெரியவர்களுக்கும் எழுதி வழங்கியவர்கள் ஔவையார், பாரதியார். ஔவையாரும் சரி, பாரதியாரும் சரி. இளம் உள்ளங்களில் நல்ல வித்திட்டால்தான் அது பசுமையான சமுதாயத்தின் அங்கம் வகிக்கும் பெரியவர்களாகத் திகழ முடியும் என்ற மனோ நோக்குடன் எழுதினார்கள். காலமெல்லாம் நிலைத்து நின்று, உலகெலாம் பரவி, பெருமைத் தேடித்தரும் இத்தகைய அமர காவிய வரிசையில் இன்று நஜனும் தன் பணியை தொடங்கியிருக்கிறார்.

'நஜன்' அவர்களின் எழுத்தின் வலிமையை நான் மதிப்பிட்டுக் கூறத் தகுதியற்றவன். ஆனாலும், விமரிசகன் என்ற முறையில் அவரது எழுத்துக்களில் 'Magnetic Inspiration' (கவர்ச்சித் தன்மை) உள்ளது என்பது மறக்க முடியாதது. இன்று 'தெய்வம் பேசுகிறது' என்ற தலைப்பில். அவரது எழுத்துகளில் நாம் இறைவன் ஆச்சார்யார், கணபதி, சூரியன், விஷ்ணு, முருகன், சிவன், அம்பிகை என்ற வரிசைப்படி ஒன்று சேர்த்து, ஒரு அறிவுக் கருத் தரங்கத்தை உருவாக்கியுள்ளார்.

குழந்தைகளுக்குத்தான் இனிப்புப் பண்டம். ஆனாலும், அதை பெரியவர்களும் விரும்புவதில் தவறில்லையே.

இந்த நூல் மட்டுமல்ல, இந்த வரிசையில் இனி வரும் நூல்கள், பக்திமணம், நல்லநெறி, ஒழுக்கம், பெரியவர்களிடம் அன்பும், பண்பும் கொண்ட நன்னடத்தை கலந்த ஒரு புதிய சமுதாயத்தை வித்துக்களாக அமைய வேண்டுமென்பதே எனது பிரார்த்தனை.

## கோவிலூர் ஆதீன கர்த்தரின் அருளாசி

ஸ்ரீ வித்யா ஞான பாஸ்கர ஸ்ரீ சக்ரராஜ சேவாரத்னம் ஸ்ரீ நஜன் அவர்களுக்கு,

அன்னை பராசக்தியின் அருள் நினைந்து எழுதுவது.

உங்களுடைய மகத்தான அரிய சாதனைகளையும் தெய்வீகத் திருத்தொண்டினையும் ஸ்ரீலஸ்ரீ மகா சன்னிதானம் மிக மகிழ்ச்சியுடன் பாராட்டுகிறார்கள்.

தெய்வங்களே பேசுவது போன்று நீங்கள் வெளியிடக் கருதியுள்ள நூல் நன்கு முடிவு பெற ஆசீர்வதிக்கிறார்கள்.

உங்களுடைய சத் சங்கல்பம் நல்ல முறையில் எளிதாக நிறைவெய்தவும், நாட்டில் தெய்வீக சக்திகள் பெருகி வெளிபட்டு அசுர சக்திகள் ஒழிந்து அறம் தழைக்கவும், எல்லாம் வல்ல அன்னை பராசக்தியின் அடியிணைகளைத் தியானித்து வாழ்த்துகிறார்கள்.

கோவிலூர்,
முகவை மாவட்டம்,
2—3—'82.

செயலர்.

---

## சுவாமி சாரதானந்தர் அருளாசி

நாம் ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குச் செல்ல ஒரு வழி தேவைப்படுகிறது. அதுவும் நேர்வழி தேவைப்படுகிறது. வழி தெரியாது திகைக்கும்போதோ, அல்லது முன்கூட்டியோ அவ் ஊருக்குச் செல்லும் வழியைக் கேட்டு அறிந்துக் கொள்கிறோம். அது போல நாம் போகவேண்டிய (வீடுபேறு) இடத்துக்கு கேட்காமலே வழி கூறுகிறார் 'நஜன்' இந்தப் புத்தகத்தில்.

வீடுபேறு அடைவதற்கு முதல் வழி பக்தியேயாகும். இந்த பக்தியென்பது வயதான பிறகு ஏற்படுவதல்ல. குழந்தைப் பருவத்திலேயே ஏற்படவேண்டும். அப்பொழுதுதான் செல்லும் மார்க்கமும் சரியாக இருக்கும். உள்ளத்திற்கும் அமைதி கிட்டும்.

உள்ளத்திற்கு அமைதி ஏற்படும்போதே வழி தானாகப் பிறந்து விடுகிறது.

அந்த வகையில், இந்தப் புத்தகத்தில் சின்னஞ்சிறு குழந்தைகள் எளிதில் புரிந்துகொள்ளும் வண்ணம், தெய்வங்கள் நேர் நின்று பேசுவது, இதுவரை யாரும் கையாண்டிராத முறையாகும்.

வாழ்க நஜன் பணி. அவர் பணி நீடிக்க, திரு. நஜன் அவர்களுக்கு நீண்ட ஆயுளைக் கொடுத்து அருள்புரிய ஸ்ரீ சாரதாம்பிகையிடம் பிரார்த்திக்கிறேன்.

முகாம் : கடலூர்.

ஸ்ரீமத் சாரதானந்தா.

# ஸ்ரீலஸ்ரீ திருச்சி சுவாமிகளின் அருளாசி



ஸ்ரீமான் நஜன் அவர்கள் குழந்தைகளுக்காக புத்தகங்கள் எழுதும் முயற்சியில் இப்போது 'தெய்வம் பேசுகிறது' என்ற புத்தகத்தை எழுதியுள்ளார். ஷண்மத தெய்வங்களும் தங்களைப் பற்றி தாங்களே எடுத்துச் சொல்வதாக விஷயங்கள் மிக அழகாக அமைக்கப்பட்டுள்ளது. முதலில் ஆசிரியர் முகவுரையே குழந்தைகள் வாழ்க்கை எப்படி அமைய வேண்டும் என்பதை விளக்குகிறது. இறைவனையும் ஆசாரியனையும் முதலில் பேசவிட்டு, பின் கணபதி முதல் பராசக்தி வரை பேசும்படி அமைத்திருக்கிறார்.

இம்மாதிரி புஸ்தகங்கள் சிறுவயதினருக்கு மிகவும் அத்யாவசியம்.

சிறுவர் சிறுமியர் மட்டுமின்றி பெரியவர்களும் இவைகளைப் படித்துப் பயன்பெறலாம். ஸ்ரீ நஜனின் இத்தொண்டு நீடித்து வளர அன்னை ராஜராஜேஸ்வரியை தியானித்து ஆசி வழங்குகிறோம்.

கெஞ்சனஹல்லி, திருச்சி சுவாமிகள்.

25—4—'82.



# ஸ்ரீமத் சத்குரு சாந்தானந்த சுவாமிகள் ஆசிச் செய்திகள்

முகாம்: ஸ்காந்தாச்ரமம்,
சேலம்.
6—4—1982.

பிரதிபா பிரசுரம் தமிழகத்தில் உள்ள நன்மக்களுக்கு 66-வது புஸ்தகமான "தெய்வம் பேசுகிறது" என்கிற புத்தகத்தைத் தருகிறது.

ஸ்ரீமான் நடராஜன் ஒரு நல்ல மேதை. நஜன் எழுதியுள்ள 65 புஸ்தகங்களையும் நன்கு ஊன்றிப் படித்துள்ளவர்களுக்கு, நஜன் பிறவிலேயே நல்ல மேதைதான் என்பதைச் சொல்லாமல் இருக்க முடியாது.

புஸ்தகத்தின் தலைப்பு "தெய்வம் பேசுகிறது" என்பதைக் காணும்போதே மனம் சந்தோஷமடைகிறது.

ஒரே பரம்பொருளான இறைவன், ஆசார்யர், கணபதி, சூரியன், முருகன், விஷ்ணு, சிவன், பராசக்திகளாகவெல்லாம் மாறி வந்து, பரம்பொருளான தன்னைப்பற்றி தனது குழந்தைகளுக்கெல்லாம், தனது உண்மையை எல்லாம் சொல்வதைப் போன்றே இருந்து வருகிறது இந்த தெய்வம் பேசுகிறது என்ற நூல்.

நல்ல தேனி போன்றவர் நஜன். தேனியானது தேனை சேகரிக்க சதா காலமும் சுறுசுறுப்புடன் இருந்து வருவதைப்போல நஜனும் உடல்நலத்தையும் பொருட்படுத்தாது பணிபுரிந்து வருகிறார். ஸ்ரீமான் நடராஜன் மிகவும் எளிமையானவர். தாமரை இலைத் தண்ணீரைப்போல வாழ்ந்துவரும் உத்தமனுமாவார்.

அவனின்றி ஓர் அணுவும் அசைவதில்லை என்னும் கருத்தை உறுதியாகக் கொண்டவருமாவர். ஏராளமான நூல்களை எழுதிக் கொடுத்துக்கொண்டே இருந்துவரும் நஜன், மேலும் உடல் உறுதியுடன் இருந்து கொண்டு தான் செய்துவரும் நற்பணிகளை எல்லாவற்றையுமே கைங்கர்யமாக, தேசத் தொண்டாகவே நம்பிக் கொண்டு. "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்ற உபதேசத்தை மேலும் மேலும் நஜன் பற்றிக்கொண்டு பணிபுரிந்து வர வேண்டுமென விசேஷமான அருளாசிகளை எல்லாம் அநுக்ரஹிக்கிறோம். நஜனின் நற்பணிகள் அனைத்தும் அநுகூலமாக நிறைவேற வேண்டுமென மேலும் மேலும் ஆசிகளை அனுப்பிக்கொண்டேயிருக்கிறோம்.

சுபம்



# தெய்வம் பேசுகிறது

'நஜன் பேசுகிருர்'

1

## ஆசிரியர் முகவுரை.

குழந்தைகளே !

சிறுவர் சிறுமிகளே !

ஆசீர்வாதம்.

உங்களைக் கண்டு உங்கள் தாய் தந்தையர்கள் மிக்க சந்தோஷம் அடைகின்றனர். உங்கள் மழலைச் சொல், தளர் நடை, பொக்கை வாய்ச் சிரிப்பு அவர்களை ஆனந்தத்தில் ஆழ்த்துகின்றன அதே சமயத்தில் நீங்கள் நல்ல முறையில் வளர்ந்து, நல்லவர்கள் என்று பெயர் எடுக்க வேண்டும் என்று அவர்கள் கவலை கொள்கின்றனர். அவர்களை எப்போதும் மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்வது உங்கள் கடமை.

உங்களை பத்து மாதம் வயிற்றில் சுமந்து, பெற்று உங்கள் உடல் நலத்திற்காக தன் வாயையும் வயிற்றையும் கட்டி, அரும்பாடு பட்டவள் உங்கள் அம்மா.

அவளுக்கு உங்களைப் பெற்றவுடன் ஒரே மகிழ்ச்சி. அதைவிட மிக்க சந்தோஷத்தை அவள் எப்போது பெறுகிருள் தெரியுமா? பிறர் உங்களை நல்லவன் (சான்ருேன் *) என்று சொல்லும்போது.

திருவள்ளுவர் என்ற மாபெரும் ஞானி நமக்காகவே 'திருக் குறள்' என்ற நூலை எழுதியிருக்கிருர். அதில் அவர், சான்ருேன் என்ற வார்த்தையை உபயோகித்திருக்கிருர். அந்த சான்ருேஞக நீங்கள் ஆக வேண்டும்.

---

* எல்லா நல்ல குணங்களையும் உடையவனே சான்ருேன்.

எப்படி சான்றோனாக ஆவது ? இது ஒரு பெரும் காரியமல்ல.

1. தாய் தந்தை சொற்படிக் கேட்டு அதன்படி நடப்பது. அவர்கள் ஒரு நாளும் உங்களுக்குக் கெடுதலைக் கனவில் கூட நினைக்க மாட்டார்கள்.

உ. தெய்வத்தினிடம் நம்பிக்கை. தெய்வம் ஒன்று இருக்கிறது. அதுவே இவ்வுலகைப் படைத்து நம் எல்லோரையும் ஆட்டி வைக்கிறது. நம்பிக்கை மிக அத்யாவசியம். சில விஷயங்களில் நம்பிக்கை வைத்துத்தான் ஆக வேண்டும். உங்கள் தகப்பன் யார்? என்று உங்களுக்கு எப்படித் தெரியும்? அம்மா சொல்லியோ அப்பா சொல்லியோ அல்லது பிறர் சொல்லியோதான் தெரியும். அதை நம்பி தான் நீங்கள் நடந்தாக வேண்டும்.

ா. எல்லோரிடமும் எல்லா பிராணிகளிடமும், பட்சிகளிடமும், ஈ எறும்பு புழு பூச்சிகளிடமும், அன்பாக இருப்பது. உங்கள் உடம்பிலுள்ள தெய்வம் அவைகளின் உடம்புகளிலும் இருக்கிறது.

நாங்கள் குழந்தைகளாக இருந்தபோது மரப்பாச்சிகளை வைத்துக்கொண்டு "உம்மாச்சி"* விளையாட்டு விளையாடுவோம். உங்களுக்கு மரப்பாச்சி என்றாலே என்ன என்று தெரியாது. கோவில் பக்கம் போனால்தானே உம்மாச்சி பற்றி தெரியப் போகிறது ?

எங்கள் அம்மா நிலாவைக் காட்டி சாதம் ஊட்டுவாள். 'தோத்தோ' (நாய்) சாக்கா இதைகளுக்கும் போட்டு எங்களுக்கும் ஊட்டுவாள். இதனால் பிற ஜீவன்களிடம் எங்களுக்கு கருணையும் இரக்கமும் அந்த பிஞ்சு உள்ளத்திலேயே ஏற்பட்டது.

நான் சிறுவனாக இருந்தபோது இரவில் அம்மாவும் வந்து என் பக்கத்தில் படுத்துக் கொண்டால்தான் எனக்கு தூக்கம் வரும். அம்மாவுக்கு 'எச்சல் இட்டு. உள் அலம்பி பார்த்து மூடிவிட்டு' வர நேரமாகும். அவள் வரும் வரை நானும் அவள்கூட சுற்றிக் கொண்டே இருப்பேன். அவள் வேலை செய்துக்கொண்டே துருவன் கதை, பிரகலாதன் கதை முதலியவைகளை எல்லாம் சொல்வாள்.

எங்கள் பாட்டி நிலா வெளிச்சத்தில் நிறைய கதைகள் சொல்வாள். என்ன ஆர்வமாகக் கேட்போம் தெரியுமா? எவ்வளவு

---

* அம்பிகையுடன் கூடிய இறைவனான உமாமகேஸ்வரன் என்ற பெயரே 'உம்மாச்சி'யாகி விட்டது.

கதைகள்தான் சொல்வாள்? அவளிடமே 'ஸ்டாக்' தீர்ந்துவிடும் போலிருக்கு. மார்ஜால சுவாமி வைக்கப்போர் வாசனத்தில் வரும் கதையைச் சொல்வாள். மார்ஜால சுவாமி என்பது பூனை என்பது அப்போது எனக்குத் தெரியாது. அதுவும் ஒரு சுவாமி போலிருக்கு என்று நினைத்துக் கொண்டிருப்பேன்.

விடியற்காலம் இருட்டு பிரிவதற்குள்ளேயே அம்மா படுக்கையைவிட்டு எழுந்துவிடுவாள். 'உதயமாச்சுது இதயம் தெளிந்தது உந்தன் தரிசனமாச்சுது' என்ற பாட்டைப் பாடுவது காதில் விழும். அதைக் கேட்க எவ்வளவு இனிமையாக இருக்கும் தெரியுமா?

எனக்குத் தெரிந்த அளவுக்கு அந்த வயதில் அவ்வளவு புராணக் கதைகள் யாருக்குமே தெரிந்திராது என்பது என் எண்ணம். அம்மா பாலூட்டி சீராட்டி இவ்வளவு பாடுபடுகிறாளே! அவள் மனம் நோகலாமா?

அதனால்தான் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்று ஔவைப் பாட்டி தாயாருக்கு முதலிடம் கொடுத்திருக்கிறார். வேதம் "மாத்ரு தேவோ பவா" என்கிறது. தாயாரை தெய்வமாக நினை என்று இதற்கு அர்த்தம்.

வயதான பின்பு ஒருவன் தன் தாயாரை அலட்சியம் செய்தாலும், அவள் அவனை வாழ்த்துவாளேயன்றி அவனுக்கு ஒருபோதும் கெடுதல் நினைக்கமாட்டாள்.

இதற்காகத் தாயாரைத் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு கொண்டாட வேண்டாம். அவள் உயிருடன் இருக்கும் வரை அவள் மனம் நோகாமல் பார்த்துக்கொண்டால் அது ஒன்றே போதும் சான்றோனாக. அவள் மனம் நொந்தால் நம் வாழ்வு அதோ கதியாகிவிடும்.

கையெழுத்து நன்கு படிய வேண்டும். இது இளமையில் பழகாவிட்டால் பின்னர் வராது. என் மாமா ஒருவர் இருந்தார். மிகச் சிறந்த வக்கீலாக விளங்கினார். படிக்கும்போது பரீட்சைகளில் முதல் மார்க் வாங்குவார்.

"போடா! உன் கையெழுத்தைப் பார்த்துப் புரிந்துகொள்ள முடியாமல் வாத்தியார் உனக்கு நிறைய மார்க் போட்டுட்டாண்டா!" என்பாராம் அவர் அப்பா.

தலையெழுத்து எப்படியிருந்தாலும் கையெழுத்து நன்றாக இருக்கவேண்டும். இதில் செலுத்தும் நேரம் ஒருநாளும் வீணாவதில்லை.

தினம் திட்டம் போட்டு வேலை செய்யுங்கள். படிப்பாக இருந்தாலும் விளையாட்டாக இருந்தாலும் எல்லாம் திட்டம் இட்டே செய்யவேண்டும். பள்ளியில் நீங்கள் படிக்க சில புத்தகங்களை வைத்திருக்கிறார்கள். அவைகளிலுள்ளதை ஊன்றிப் படித்திருந்தால் பரீட்சையில் நிறைய மார்க் வரும் அந்த மார்க்குகளே உங்களைக் கைதூக்கி விடும்.

எல்லாவற்றுக்கும் அஸ்திவாரம் தெய்வ நம்பிக்கை. ஏதோ ஒரு சக்தி நம்மை எல்லாம் ஆட்டுவிக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. அந்த தெய்வ நம்பிக்கையால் தன்னம்பிக்கை, அதாவது உங்கள் ஆற்றல்மீது ஒரு நம்பிக்கை ஏற்படும். என்னால் இக்காரியத்தை செய்து முடிக்க முடியும் என்பதே தன்னம்பிக்கை. இந்த நம்பிக்கைகளை அஸ்திவாரமாகக் கொண்டே வாழ்க்கை என்ற வீட்டைக் கட்டவேண்டும்.

"தெய்வம் தெய்வம் என்கிறீர்களே! அது எங்கு இருக்கிறது? என்று கேட்கிறீர்களா? இம்மாதிரி கேள்வியை ஹிரண்யாக்ஷன் தன் மகனான பிரகலாதனைக் கேட்டான். அதற்கு அவன் அளித்த பதில், "தூணிலும் இருப்பான் துரும்பிலும் இருப்பான். இக்கேள்விக்கு என் பதில், "அந்தெய்வம் எங்கு இல்லை. உன் உள்ளேயும் இருக்கிறான், என் உள்ளேயும் இருக்கிறான். "அங்கிங்கென்னாதபடி எங்குமிருக்கிறார்" என்கிறார் தாயுமானவர் என்கிற மகான்.

நாம் நடப்பது, பேசுவது, விளையாடுவது, உண்பது, உடுப்பது, இதெல்லாம் அவனால்தான் சாத்யமாகிறது.

அவன் உன் உள்ளேயிருந்துகொண்டு நீ சரியான காரியம் செய்கிறாயா? பொய் சொல்கிறாயா என்பதை எல்லாம் கவனித்துக் கொண்டே இருக்கிறான்.

அந்த இறைவன் ஒருவனே. "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்று நம் முன்னோர்கள் கூறியிருக்கின்றனர்.

அந்த ஒரு கடவுளே பல கடவுள்களாகவும் இருந்து அருள் செய்கிறான். இறைவன் என்று சொல்ல விரும்பாதவர்கள் அதை ஒரு சக்தி என்று சொல்வார்கள். இம்மாதிரி ஒரு சக்தி இருப்பதை யாரும் மறுக்க முடியாது.

ஏராளமான பேர் தங்கி இளைப்பாறக்கூடிய மாபெரும் ஆலமரம் எங்கிருந்து முளைத்தது? ஒரு சின்னஞ்சிறு விதையிலிருந்து. அந்தப் பெரிய ஆலமரம் சிறு விதைக்குள் எப்படி அடங்கியிருந்தது? அது தான் இறைவனின் லீலா விநோதம்.

உலகில் எந்தக் காரியமும் செயல்பட ஆதரவு சக்தி, (பாஸிட்டிவ்) எதிர்ப்பு சக்தி (நெகடிவ்) இரண்டும் இணையவேண்டும். இதைத்தான் சிவம் என்றும் சக்தி என்றும் கூறுகிறார்கள். உலகம் இயங்குவதே இந்த இரண்டும் இணைவதால்தான். இது பற்றி இவ்வளவு உங்களுக்கு இப்போது தெரிந்தால் போதும்.

இரு கம்பிகள் வழியாக சக்தி பாய்ந்து ஒன்று சேரும்போது மின்சார விளக்கு எரிகிறது. கண்ணுக்குத் தெரியாத இந்த சக்தி போல இறைவன் நம்மிடையே மறைந்து உறைகிறார்.

இனி முக்கியமான தெய்வங்களே உங்களுடன் பேசப் போகிறார்கள். தங்களைப்பற்றி உங்களுடன் பேசப் போகிறவர்கள் கணபதி, சூரியன், முருகன், விஷ்ணு, சிவன், பராசக்தி (அம்பிகை) ஆகியோர்.

நம் வாழ்க்கையில் இந்த மூர்த்திகளின் தயவு நமக்கு வேண்டும். மற்ற எல்லா தேவதைகளும் இந்த ஆறு பேர்களில் அடக்கம்.

முதலில் நோயற்ற வாழ்க்கை அவசியம். இது சுவரை வைத்துக் கொண்டு சித்திரம் எழுதவேண்டும் என்பதைப் போன்றது. உடல் ஆரோக்கியமுள்ளதாக இருந்தால் மனமும் தெளிவடைந்து நன்கு செயல்படும். இந்த ஆரோக்யத்தை அளிப்பவனே ஆதித்தன் என்ற சூரியன். பிரத்யக்ஷ தெய்வமாக விளங்குபவர் இவர்தான். சூரிய உஷ்ணம் இல்லை என்றால் என்ன நேரும் என்பதை சிந்தித்துப் பார்த்தால் விளங்கும். ஆகவே சூரிய வழிபாடு வற்புறுத்தப் பட்டிருக்கிறது. இவருக்கு நமஸ்காரம் என்றால் மிகவும் பிரியம். தினமும் சூரிய நமஸ்காரம் செய்வது மிகவும் நல்லது. முடியாவிடில் ஞாயிறு அன்றாவது சூரிய நமஸ்காரம் செய்யவேண்டியது அவசியம்.

நம்மை ரக்ஷித்து காப்பவர் மகாவிஷ்ணு. நம் உடலையும் உள்ளத்தையும் நாம் பரிபாலிக்க முடியாது. உடலைப் பாதுகாப்பது போல உடலிலுள்ள உயிரையும் பாதுகாக்க வேண்டும்.

இந்த உடல் அடிக்கடி ஜன்மம் எடுத்து பிணி, பசி, மூப்பு (வயதான நிலைக்கு இரையாகிறது. இதன் சேர்க்கையால் ஜீவன் பெரும் துன்பம் அடைகிறது. உணவூட்டி உடல் வாடாவண்ணம் காக்கிறோம். அப்படியே உயிருக்கும் உரம் வேண்டும். உயிர் உடலைக் கெடுக்காதபடி செய்வதே இதற்கான வழி. அப்படிச் செய்வதே மோக்ஷம்.

மோக்ஷம் என்றால் விடுபடுவது என்று பொருள். எதிலிருந்து? பிறப்பு-இறப்பு, இன்பம்-துன்பம், மானம்-அவமானம் முதலியவை

களிலிருந்து விடுபட வேண்டும். இதற்கு ஏற்றவர் மகாவிஷ்ணு தான். ஆகவே சூர்யனால் ஆரோக்கியம் பெற்று விஷ்ணுவினால் நல்வாழ்க்கை நடத்த வேண்டும்.

இந்த மோக்ஷம் அடையாவண்ணம் தடைசெய்வது அஞ்ஞானம் என்கிற மாயை. அது ஒழிந்தால்தான் பாசம் பந்தம் நீங்கும். அஞ்ஞானம் நீங்கினால் ஒழிய ஞானம் ஏற்படாது. ஞானம் ஏற்பட்டாலொழிய மோக்ஷம் சித்திக்காது. ஆகவே இந்த அஞ்ஞானத்தை நீங்க வழி தேடியாக வேண்டும். அஞ்ஞானத்தை நீக்கி மெய்ஞானத்தைத் தருபவர் சிவபெருமான்.

அம்பிகை என்பது யார்? அன்னை குழந்தைகளை வளர்க்க காட்டும், அன்பும் கருணையும் எல்லோரும் அறிந்தது தான். தாயின்றி சேய் வாழமுடியாது. அவள் காரணமின்றி கருணை காட்டுபவள். இதனால் அவளுக்கு அவ்யாஜ கருணாமூர்த்தி என்று பெயர். உலகில் எக்காரியத்தை செய்யவும் சக்தி வேண்டுமல்லவா? இதை அளிப்பவள் அம்பிகை.

ஒரு காரியம் நிறைவேறுமுன் முதலில் அதைப் பற்றி ஊக்கம் (இச்சை) ஏற்பட வேண்டும். பின்னர் அதைச் செய்து முடிக்க (கிரியை) வேண்டும். அப்போதுதான் அக்காரியத்தினால் ஏற்பட்ட பலன் (ஞானம்) கிடைக்கும். இந்த மூன்றான இச்சை, கிரியை ஞான சக்திகளாக அம்பிகையே விளங்குகிறாள்.

உலகில் சிவமும் சக்தியும் சேர்ந்து செயல்பட்டால்தான் எக்காரியமும் நடைபெறும். இந்த சிவசக்தி ஐக்கிய மூர்த்தியாக விளங்குபவர் முருகன். அவருடைய கலைகளில் ஒன்று அம்பிகையினுடையது. மற்ற ஐந்தும் சிவபெருமானுடையது. இவர் சிவன் சக்தி இரண்டும் கலந்ததாக இருப்பதால் பஞ்சாயதன பூஜை* (அதாவது சூரியன் விஷ்ணு, சிவன், அம்பிகை, கணபதி இவர்களை வழிபடுவது) யில் இவருக்குத் தனியாக இடம் ஒதுக்கவில்லை.

வாழ்க்கையில் எந்தக்காரியமும் விக்னமின்றி நடைபெறவேண்டாமா? நல்ல காரியம் என்றால் பல தடைகள் வரும். இடையூறுகள் அகன்றாலன்றி, ஒரு சிறு காரியத்தையும் சாதிக்க முடியாது.

மோக்ஷத்தை விரும்புபவர்களுக்கு தேவர்களே இடையூறு (விக்னம்) செய்வர் ஏன்? நமக்குப் பால் தரும் வளர்ப்பு பசு நம்மை விட்டு ஓடிவிட முயன்றால் நாம் சும்மா இருப்போமா? சத்கர்மாக்களால் (நல்ல காரியங்களால்) நாம் தேவர்களுக்கு அன்னம் அளிக்

கிரும், நாம் மோக்ஷமடைந்தால் மந்தையிலிருந்து ஒரு பசு ஓடிப் போவது போலாகும். ஆகவே சுயநலமுள்ள தேவர்கள் தடை செய்வது இயற்கை. இந்த விக்னங்களை எல்லாம் தீர்க்க கணபதியின் தயவு வேண்டும். இவ்வுலகில் நாம் எடுத்த காரியம் தடையின்றி முடியவும், பிறப்பு இறப்பு என்றும் பெரும் துன்பம் அகன்று ஆனந்த மயமான மோக்ஷம் பெறவும் உதவுபவர் கணபதி.

இந்த 6 பேர்கள் தங்களைப்பற்றிக் கூறுமுன் பொதுவாக உள்ள இறைவன் என்ன சொல்கிருர் என்பதைப் பார்ப்போம். இந்த 6 தெய்வங்களின் சக்திகளும் ஒன்ருக சேர்ந்தவரே இறைவன்.

---

* பரமாத்மா நாமரூபமற்றவர். ஜீவன், அப்புடன் உப்பு சேர்ந்தார்ப்போல் இரண்டறக் கலப்பதே மோக்ஷம். நிர்க்குணமான பரமாத்மாவை உபாசிப்பது கஷ்டம். ஆகவே சகுணமாக மூர்த்திகளை முதலில் தியானித்து பூஜிப்பது முதல்படி, பின்னர் உருவமற்ற இந்த மூர்த்திகளைப் பூஜிப்பது நிர்க்குண வழிபாட்டின் அடுத்தபடி.

இந்த ஐவரை, இஷ்டமான ஒருவரை நடுவில் வைத்து மற்ற நால்வரை நான்கு மூலைகளில் வைத்து பூஜிக்க வேண்டும். இந்த பஞ்சாயதன பூஜை மிக சிரேஷ்டமானது.

'சோணபத்ரா' என்ற நதியிலிருந்து உண்டான சிகப்புக் கல்லை விநாயகராக பூஜிக்க வேண்டும். ஸ்படிகத்தில் ஆதித்யனை அர்ச்சிக்க வேண்டும். ஸ்வர்ணமுகீயில் அகப்படும் கல்லை அம்பிகையாக வழிபட வேண்டும். கண்டகீநதியில் கிடைக்கும் சாலிக்கிராமத்தை மகாவிஷ்ணுவாக பூஜிக்க வேண்டும். நர்மதையில் கிடைக்கும் பாணம் என்ற கல்லை சிவனுக வழிபட வேண்டும்.

---



# இறைவன் * பேசுகிறார்

# 2

'நம்பிக்கை இருந்தால் கடவுள் உண்டு' 'மக்கள் சமுதாயம் தான் கடவுள்' 'அன்பில்தான் ஆண்டவன்'. 'ஆண்டவன் அளிக்க வந்தார். அதை வாங்கத்தான் மடியில்லை' 'ஐந்துபேர் கையிலே ஆண்டவன்'.

இம்மாதிரி என்னைப் பற்றிப் பல பழமொழிகள் உண்டு.

எனக்கு தமிழ் மக்கள் 'கடவுள்' என்ற பெயர் கொடுத்திருக்கிறார்கள். இதிலுள்ள முதல் இரண்டு எழுத்துக்கள் (கட) அனைத்தையும் கடந்தது, அப்பாற்பட்டது என்பதைக் குறிக்கும். பின் இரண்டு எழுத்துக்கள் (உள்) அனைத்திற்கும் அப்பாற்பட்ட அந்தப் பொருள் அனைத்தின் உள்ளேயும் உள்ளது என்பதைக் குறிக்கின்றது.

இந்த தமிழ்ச் சொல்லுக்கு ஈடாக வேறு எந்த மொழியிலும் எனக்குப் பெயர் இல்லை.

இறைவன் என்கிறீர்களே? அப்படி ஒருவன் இருக்கிறானா? அப்படியிருந்தால் கண்ணுக்குத் தெரியாதா என்கிறார்கள்.

---

இறைவனைக் குறிக்க தலையில் லிங்க உருவம் போட்டதின் காரணம் லிங்கம் சிவச்சின்னம் மட்டுமல்ல. லிங்கத்தில் அம்பிகை (சக்தி). பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் எல்லோரும் அடங்கி இருக்கிறார்கள் என்பதால்தான்.

நான் இருக்கிறேன் என்று நீங்கள் நினைத்தால் இருக்கிறேன்.

இல்லை என்று நினைத்தால் இல்லை. இந்தத் தத்துவத்தைக் குறித்துத் தமிழ்க்கவி கம்பர், தன் ராமாயணத்தில் யுத்த காண்ட கடவுள் வாழ்த்தில் மிக அழகாக குறிப்பிட்டிருக்கிறார்.

ஒன்றே நினைக்கின் ஒன்றேயாம்
பலவென் றுரைக்கின் பலவேயாம்
அன்றே யென்னின் அன்றேயாம்
'ஆம்'என்றுரைக்கின் ஆமேயாம்
இன்றே யென்னின் இன்றேயாம்
உளதென் றுரைக்கின் உளதேயாம்
நன்றே நம்பிகுடி வாழ்க்கை
நமக்கிங் கென்னோ பிழைப்பம்மா!

பல தெய்வ வழிபாடுள்ள மதங்களைப் பரிகசிப்பதற்கில்லை.

"மேலொரு பொருளு மில்லா
மெய்ப் பொருள் ஒன்றே"

என்று கூறியும், அறிஞர் பலவாகவும் உரைக்கின்றார் என்று வேதங்கள் கூறுகிறதல்லவா? இந்த உண்மையை "ஒன்றே யென்னின் ஒன்றேயாம், பலவென்றுரைக்க பலவேயாம்" என்கிறார் கம்பர்.

என்னைக் குறித்துப் பேசும்போது இதுதான் நான் என்று சுட்டிக் காட்ட முடியாது. ஆனால் இது அன்று. அது அன்று என்று சொல்லிக்கொண்டே போகலாம். 'இதுதான்' என்று துணிவதற்கும் இடம் இருக்கிறது இதையே "அன்றே யென்னின் அன்றேயாம், ஆம் யென்றுரைக்கின் ஆமேயாம்" எனப்படுகிறது.

'இல்லை' என்று சொல்லும், நாஸ்திக வாதத்திற்கும் இடம் கொடுக்கிறது மெய்யான ஆஸ்திகம்.

'இலன் என இகழ்ந்தோருக்கு இல்லையும் ஆயின்' என்கிறார் மாணிக்கவாசகர். இல்லை என்போருக்கு நான் இல்லை என்றே வைத்துக் கொள்கிறேன். நஷ்டம் யாருக்கு?

உங்கள் உடலில் உங்கள் ஆத்மாவுடன் ஒன்றியுள்ளேன்.

வெளியில் நடைபெறும் புறச் செயல்களைக் கண்காணிக்க போலீஸ் இருக்கிறது. ஆனால் அக எண்ணங்களை கண்காணிக்க யாருமில்லையே என்று நினைக்காதீர்கள். கண்காணிக்க நான் இருக்கிறேன். எங்கும் எல்லாமாக இருக்கும் இறைமையாகிய நான் உன் உள்ளத்திலும் இருக்கிறேன்.

கண்காணி இல்லென்று கள்ளம்பல செய்வர்
கண்காணி இல்லா இடமில்லை காணுங்கால்
கண்காணி யாகக்கலந் தெங்கும் நின்றானைக்
கண்காணி கண்டார் களவொழிந் தாரே.

ஆனால் நான் எங்கேயோ இருக்கிறேன் என்று நீங்கள் எல்லாம் நினைக்கிறீர்கள்.

விஸ்தீரணமான பூமியைவிட, நீர்ப்பரப்பு உயர்ந்தது. ஒளி, நீரைப்போல் அல்லாமல் எங்கும் நிறைந்து நீரைவிட உயர்ந்ததாகிறது. வாயு இல்லாத இடமே இல்லையாகையால் ஒளியைவிட காற்று உயர்ந்தது. இக் காற்றையும் தன்னுள் அடக்கிய ஆகாசம் காற்றைவிட உயர்வானது.

மனம் ஆகாயத்தையும் கடந்து செல்லும் வலிமை பெற்றதால் ஆகாயத்தைவிட உயர்ந்தது. மனம் லயிக்கும் விஷயங்களில் உள்ள தத்துவத்தைப் புரிந்துக்கொள்ளும் வலிமை அறிவுக்கே ஏற்பட்டுள்ளதால், மனதைக் காட்டிலும் அறிவே சிறந்தது.

காலம் காட்டும் வழியில் அறிவு செல்ல வேண்டியிருப்பதால் அறிவுக்கும் மேம்பட்டது காலம். ஆனால் பிரபஞ்சமே தானாகி மேலே சொல்லப்பட்ட எல்லாவற்றையும் தனக்குள் அடக்கிக் கொண்டிருக்கும் பரமாத்மாவாகிய நான் இந்த எல்லாவற்றிற்கும் மேம்பட்டவனில்லையா?

நான் ஆதி, நடு, அந்தம் இம் மூன்று நிலைகளும் அற்றவன். எங்கும் இருப்பவன், வேறு எண்ணமின்றி என்னையே உள்ளன்புடன் எவன் ஒருவன் சரண் அடைகிறானோ அவனுடைய யோக க்ஷேமங்களை நான் கவனித்துக் கொள்கிறேன்.

இவ்வளவு உறுதி கொடுக்கும் என்னை தினம் சிறிது நேரமாகவாவது சிந்திக்க வேண்டாமா? அதற்காகத்தான் பூஜை, ஜபம், தவம் எல்லாம் இருக்கின்றன. நேரம் இல்லாதவர்கள் ஒரு புஷ்பத்தைப் போட்டு வணங்கிவிட்டுச் செல்லலாமே.

எங்கும் எதிலும் என்னைக் காணும் மனப்பான்மை ஒரு அரிய பண்பு. திருநாவுக்கரசர்,

பொன்னானாய், மணியானாய் போகம் ஆனாய்
பூமிமேல் புகழத்தக்கப் பொருளே உன்னை
என்னானாய் என்னானாய் என்னின் அல்லால்
ஏழையேன் என் சொல்லி ஏத்துகேனே.

என்று, நான் எப்படியெல்லாம் உருப்பெருகிறேன் என்பதைச் சொல்லத் தெரியாமல் திணறுகிருர்.

சில பொருள்கள் பழமையாக இருந்தாலும் எக்காலத்திலும் பயன் உடைமையினுல் புதுமையாகத் தோன்றும்.

சூரியன் எப்போது தோன்றினுன்? தெரியாது? ஆனுல் மிகப் பழங்காலத்திலேயே தோன்றினுன். ஆனுல் தினம் உதய மாகி பயன் அளித்து வருகிருன்.

நான் எப்போது தோன்றினேன்? எனக்குத் தோற்றம் ஏது? மறைவு ஏது? எல்லா காலத்திலும் வாழும் மக்களுக்கு அருள் செய்கிறேன். இதை மாணிக்க வாசகர்,

முன்னைப்பழம் பொருட்டு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே

என்கிருர்.

ஒரு மின்னல் வந்தால் உடனே மறைந்து விடுகிறதே. அப்படி மறையாமல் மின்னலாகவே ஒளியுடன் இருப்பதுதான் என் ஸ்வ ரூபம். இதுவே பிரகாச ரூபம். இதையே 'ஸக்ருத் வித்யுதம்' என்று உபநிஷத்திலே சொல்லியிருக்கிறது ஸக்ருத் என்ருல் ஒரு தரம். வித்யுத் என்ருல் மின்னல். ஒரு தரம் மின்னிய மின்னல் அப்படியே இருக்க வேண்டும்.

எனக்குப் பதி என்று பெயர் உண்டு. ஜீவன்களாகிய நீங்கள் எல்லாம் பசுக்கள். உங்களை பாசம் என்பதால் கட்டி வைத்திருக் கிறேன். ஏன்? நீங்கள் உங்களையும் தொல்லைப்படுத்திக் கொண்டு பிறரையும் தொல்லைப்படுத்தாதிருக்க. மாடு பிற வயல்களில் மேய்ந் தால் அந்த வயலுக்கு சொந்தக்காரன் அதை அடித்து விரட்டாமல் இருப்பாஞ? என்று நீங்கள் உங்களுக்கும் கஷ்டம் ஏற்படுத்திக் கொள்ளாமல் பிறருக்கும் தொல்லை தராதிருக்கிறீர்களோ அன்று உங்கள் கட்டு அவிழ்க்கப்பட்டு விடும்.

ஒரு பைத்தியக்காரப் பிள்ளை பிறர்மீது கல்லை விட்டு எறிகிருன் என்ருல் அவனைப் பெற்ற தாயே அவனைக் கட்டி வீட்டிற்கு வெளியே விடாமல் இருக்கிருள். அந்தத் தாயின் செயல் கொடுமையா? அது போலத்தான் நான் கட்டிப்போடுவதும்.

மோக்ஷம் வருவது என்பது என்ன? தானும் உபத்திரவத்திற்கு ஆளாகாமல், பிறருக்கும் உபத்திரவம் இல்லாத நிலை. இந்நிலை ஏற்பட்டால் பாசம் அறுந்துவிடும்.

"எனக்கு ஞானம் உபதேசியுங்கள்" என்ருன் ஒரு சிஷ்யன் தன் குருவினிடம்.

உனக்கு அப்பா அம்மா இருக்கிருர்களா? என்று அவர் கேட்டார்.

இருக்கிருர்கள் என்ருன் சிஷ்யன். அவர்களை அழைத்துக் கொண்டு வா ? என்ருர் குரு.

மறுநாள் சிஷ்யன் தன் பெற்ருேர்களை அழைத்து வந்தான். இவர்களில் உன் அம்மா யார்? என்ருர் குரு. சிஷ்யன் காட்டினுன். அப்பா யார் என்று கேட்டார். சிஷ்யன் காட்டினுன்.

இவர்கள் உன் அம்மா அப்பாதான் என்று உனக்கு எப்படித் தெரியும் ? என்று கேட்டார் சிஷ்யனை.

சிஷ்யன் விழித்தான். ஆகவே எல்லாவற்றையும் நாம் ஆராய்ந் தறிவது என்பது முடியாத காரியம். சில விஷயங்களை நம்பித்தான் செயல்பட வேண்டும். இந்த மாதிரி நான் இருக்கிறேன் என்பதை நம்பி நீங்கள் என்னை அடைய முயல வேண்டும்.

ஈஸ்வர ஆராதனம் என்று வைத்திருப்பது ஏன் தெரியுமா ?

வீட்டில் அரிசியை சமைத்து சாப்பிடுகிறீர்கள். ஒரு மணி அரிசியை உங்களால் பண்ண முடியுமா ? அது உற்பத்தியானது உங்களை மீறிய ஒரு சக்தியினுல்தான். குடிக்கும் தண்ணீரைக் கொடுத்தது யார் ? உங்களை மீறின ஒரு சக்திதான். ஒரு பொருளை நீங்கள் உபயோகிக்குமுன் அதை உற்பத்தி தந்த சக்தியை நீங்கள் நினைவில் கொண்டு அதற்கு மானசீகமாக அர்ப்பணம் செய்ய வேண்டும். இதைத்தான் ஈஸ்வரார்ப்பணம் என்று சொல்கிருர்கள்.

இதை எந்த முறையில் செய்வது என்பதற்குத்தான் பூஜை என்று பெயர்.

திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளில் முதல் அதிகாரத் திலேயே அவர் என்னைப்பற்றித் தான் பேசுகிருர்.

அவர் எந்த தெய்வத்தின் பெயரையும் குறிப்பிடவில்லை. எந்த உருவத்தையும் எடுத்துப் பேசவில்லை. பொதுவாக தெய்வத் தின் குணங்களைச் சொல்லி இத்தகைய முழுமுதற் பொருளைத்தான் வழிபடுவதாகக் கூறுகிருர்.

நம் குறிக்கோள் வேறு. மேல் நாட்டாரின் குறிக்கோள் வேறு.

அறம், பொருள், இன்பம், வீடு அடைதல் நூற்பயன் என்கிறது நன்னூல் என்கிற இலக்கணம். நம் கல்வி நம்மை எங்கே கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும்? நம்மைப் பொருள் ஆதாரமாகிய நெறியிலே கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும் என்று சொல்லவில்லை. என்னுடைய திருவடிகளிலே கொண்டு சேர்க்கிற கல்விதான் உண்மையானக் கல்வி.

திருமூலர் ஒன்றே குலம் ஒருவனே தெய்வம் என்கிறார். நீங்கள் எல்லோரும் மனிதகுலம் என்பதைச் சேர்ந்தவர்களே. தெய்வமும் ஒன்றே. அதுவே பலவாக பல உருவங்கள் எடுத்து அருள் பாலிக்கிறது. எந்த தெய்வத்தை நீங்கள் வழிபட்டாலும் அது என்னை வழிபட்டதாகவே ஆகிறது.

நான்தான் எங்கும் இருக்கிறேனே! எனக்கு கோவில் எதற்கு? என்கிறார்கள். சூரிய வெப்பம் எங்கும்தான் பரவி இருக்கிறது. ஆனால் பூதக்கண்ணாடியின் கீழ் பஞ்சை வைத்தால் அது தீப் பிடித்துக் கொள்கிறதே. சூரிய கிரணங்கள் பூதக் கண்ணாடியின் மூலம் பஞ்சுமீது குவிகிறது. இது போலவே எங்கும் நான் இருந்தாலும் உங்களால் என்னை கிரஹிக்க முடியாது. மகான்கள் தம் தபோ சக்தியால் என் சாந்நித்யத்தை இறக்கி ஆலயங்களில் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். கம்பி மூலம் மின்சாரம் வருவது போல மகாமந்திரங்கள் மூலம் இந்த சாந்நித்யத்தை அவர்கள் விக்கிரகங்களில் பாய்ச்சியிருக்கிறார்கள். எனக்கு உங்கள் மனக் குறை எல்லாம் தெரியும். மற்ற காரியங்களுக்காக என்னிடம் வரும் நீங்கள் கடைசியில் எனக்காகவே என்னிடம் வரும் நிலைமை ஏற்படும்.

பேத ஞானமற்ற பூரண அன்பு நிலையை அடைய வேண்டும். என்னிடம் அன்பு செலுத்தினாலேயே இந்நிலை கிட்டும். பிரதிப் பிரயோஜனத்தை எதிர்பார்த்தால் அது வழிபாடு ஆகாது. என்னிடம் அன்பு ஏற்பட்டால்தான் பிறரிடம் அன்பு தானாகவே ஏற்படும். முக்கோணம் போல என்னிடம் உங்களுக்கு அன்பு. எனக்கு மக்களிடம் அன்பு. எனவே உங்களுக்கும் மக்களிடம் அன்பு ஏற்படும்.

## என்னை ஏன் வழிபடவேண்டும்?

என்னை வழிபடுவது, உங்களை நீங்கள் அறிந்துக் கொள்வதற்காகவே. இது பெரிய வேதாந்த விஷயம் என்று ஒதுக்கி விடக் கூடாது. என்னை வழிபட்டால் முதலில் ஏற்படுவது மன அமைதி.

மனதை ஒரு நிலைப்படுத்தி பக்தி செய்ய முடியாதவர்களுக்கே விக்ரக வழிபாடு ஏற்பட்டுள்ளது. ஆலயங்களில் வழிபடப்படும் என் உருவங்கள் 'அர்ச்சா' என்றும், உங்கள் இருதயத்தில் வசிக்கும் என்னை "ஹார்த்தா" என்றும் அழைக்கிறார்கள்.

எவ்வித உருவமோ குணமோ இல்லாத எனக்கு பல உருவங்களும் பல பெயர்களும் கொடுத்து வழிபடுகிறார்கள். என்னை உருவமுடன் வழிபடுவது சகுண வழிபாடு. உருவமற்றவனாக வழிபடுவது நிர்க்குண வழிபாடு. சகுன வழிபாட்டில் பழகியே நிர்க்குண வழிபாட்டில் ஈடுபட வேண்டும்.

எனது நிர்க்குணமான பரமாத்மா ஸ்வரூபத்தை விளக்க வந்த ஆதிசங்கரர் தன் பிரும்மஸூத்திர பாஷ்யத்தில் தேவாதிகரணத்தில் வியவஹார தசையில் தேவதைகளுக்கு சரீரம் உண்டு என்கிறார்.

உலக க்ஷேமத்திற்காக விக்ரகங்கள் ஆலயங்களிலும் குடும்ப க்ஷேமத்திற்காக வீடுகளிலும் வழிபடப்படுகின்றன.

மோக்ஷத்தை அடைய விரும்புபவனுக்கு முக்கியமான சத்ரு அவர் சொந்த மனமே. தன்னை வென்றவன் தனக்குத்தான் நண்பன். தன்னைத்தான் ஆளாதவன் தனக்குப் பகைவன்.

இதனும் விளக்கிக் கூறினால் "உனக்குச் சிறந்த நண்பன் நீயே. உனக்கு விரோதியும் நீயே "வேற்றுமை உணர்ச்சியை அகற்றினால் உலகிலுள்ள எல்லா ஜீவ ராசிகளிடமும் நீங்கள் நண்பராகி விடலாம்.

மனம் இயற்கையாலும், தீய சகவாசத்தினாலும் ஆத்மாவுக்குத் துன்பமிழைத்தல் பிரத்யட்சம். நல்ல சகவாசத்தாலும் நல்ல பயிற்சியாலும் மனதை உபகார வஸ்துவாகச் செய்தல் சாத்யம் என்பது மகான்களின் சர்வ சாதாரண அனுபவம்.

அக்ஞானம் என்பதைத் தொலைக்கத்தான் வேண்டும். மனதைக் கட்டுப்படுத்துதல் என்றால் அக்ஞானத்தைத் தொலைத்தல் என்றே அர்த்தம். இந்த அக்ஞானத்தினால்தான் ஜீவர்களுக்குத் தொல்லையே ஏற்படுகிறது.

அக்ஞானமும் என் மாயைதானே? அதை ஏன் தொலைக்க வேண்டும்? இதற்கு பாரதி சொல்கிறார்.* எல்லாம் கடவுள். ஞான

---

* பகவத்கீதை மொழி பெயர்ப்பு முன்னுரை காண்க.

மும் கடவுள் என்பதை அறிந்தாலே அஞ்ஞானம் போய்விட்டது. அஞ்ஞானமும் அதனாலாகிய துன்பமும் கடவுள் மயம் என்பது மெய்யே எனில், பின்னர் அவை நீங்கி நீ ஞானமும் இன்பமும் எய்தியதும் கடவுள் செயல் என்பதை மறந்து விடாதே. அஞ்ஞானம் நீங்கியது பற்றி வருத்தப்படாதே'' என்கிறார்.

தெய்வபலம் : மனிதப் பிறவி மிக உயர்ந்தது. காரணம் பகுத்தறியும் சக்தி இருப்பதே இதில் துன்பங்கள கஷ்டங்கள் ஏற்படுவதை தவிர்க்க முடியாது இக்கஷ்டங்களைப் போக்கிக் கொள்ள தெய்வபலம் மிக முக்கியமானது.

தைவமேவபுரம் மன்யே மானுஷந்து நிராத்தகம்

விசுவாமித்திரர் வசிஷ்டருடன் போராடித் தோற்றபின் மனித பலம் பிரயோஜனமில்லை, தெய்வ பலமே அவசியம் என்று சொல்லி தபஸ் செய்ய புறப்பட்டார் என்கிறார் வால்மீகி.

மனிதனுக்கு பணபலமோ, வித்யாபலமோ, சரீர பலமோ, ஆள் பலமோ நிலையானது அல்ல. தவிரவும் சமயத்தில் உதவும் என்றும் நம்ப முடியாது.

பணபலம் : பாங்கில் பல ஆயிரம் சேர்த்து வைத்திருப்பவருக்கு ஒரு ஞாயிற்றுக்கிழமை அல்லது இரவு வேளையில் அவசியத் தேவை ஏற்பட்டால் மேற்படி பணம் இருந்தும் உதவாது.

வித்யாபலம் : எவ்வளவு படித்திருந்தாலும் பெரிய சபையில் ஒன்றும் தோன்றாமல் மறதி வந்து அவமானப்படும்படி ஆகி விடலாம்.

சரீரபலம் : பலபேர்களை எதிர்த்து நிற்கக்கூடிய சரீரபலம் அமைந்த பயில்வானாக இருந்தாலும், வியாதியில் பீடிக்கப்படும் சமயம் அவன் எழுந்து நடக்கவும், உட்காரவும் பிறர் உதவி தேவைப்படும் நிலைமை ஏற்படுகிறது.

ஆள்பலம் : எந்த நிமிஷம் கைவிடும் என்று சொல்ல முடியாது. ஒருவனை வாழ்க வாழ்க என்று வாழ்த்தும் ஆயிரக்கணக்கான மக்கள் ஒரே நாளில் ஒழிக ஒழிக என்று சொல்லி எதிர்க்க ஆரம்பித்து விடுகிறார்கள். (நம் அனுபவத்தில் இவைகளை பார்த்து வருகிறோம்) ஆகையால் சமயத்தில் மனிதனுக்கு உதவுவது தெய்வ பலம்தான். அர்ஜுனனைப் பார்த்து கீதையில் ஸ்ரீ கிருஷ்ணர்,

"நிமித்தமாத்ரம் பவ"

"அர்ஜுனா நீ காரணமாகமட்டும் இரு. நான் உன் எதிரிகளை முன்பே அழித்துவிட்டேன்" என்கிறார். (அதாவது சக்தி அற்றவர்களாகச் செய்துவிட்டேன் என்று சொல்கிறார்.) எப்பொழுது உதவி தேவைப்படும் என்றுகூட அறியமுடியாமல் இருக்கும்போது தெய்வ பலம்தான் சமயத்தில் உதவக்கூடியது.

இத்தெய்வ பலத்தை புருஷ பிரயத்தனத்தினால்தான் அடைய முடியும். புருஷ பிரயத்தனம் என்பது தெய்வ பலத்தினால் காலம் வரும்போது பலிக்கும். தெய்வ பலம் தனியாகக் கொடுத்துவிடாது.

தெய்வத்துடன் மூன்று உள்ளதாகச் சொல்வார்கள், தெய்வம், பௌருஷம், காலம். இம்மூன்றும் சேர்ந்து செயல்படுகிறது. இம் மூன்றையும் பிரித்தால் ஒன்றும் செயல்படாது. இம்மூன்றும் சேர்ந்தால்தான் உலகமே ஜீவிக்கும்.

உங்கள் ஜீவனத்திற்கு அவசியமானது அன்னம். அது நெல்லாகக் கிடைக்க என்ன செய்ய வேண்டும். இதுவே புருஷ பிரயத்தனம். (பௌருஷம்) பிறகு மழை பெய்ய வேண்டும், இதுவே தெய்வ பலம் இதற்கு காலம் ஒத்ததாக இயக்க வேண்டும். அதாவது விவசாயம் செய்யும் காலம் அனுகூலமாக இருக்க வேண்டும். இம்மூன்றும் சேர்ந்தால்தான் பல சித்தி ஏற்படும். இம்மூன்றுமே கிருஷி, விருஷ்டி, காலம் எனப்படுகிறது.

பிரயத்தனம், தெய்வம், காலம் இம்மூன்றும் சேர வேண்டும். ஆகவே நீங்கள் உங்கள் காரியம் நடைபெற உங்கள் முயற்சிகளைச் செய்யுங்கள். எல்லாம் நான் செய்ய உதவுவேன் என்று சோம்பேறியாக இருக்காதீர்கள். இப்படிச் செய்யும் முயற்சி சத் கர்மவாக இருக்க வேண்டும். மகத்தான கஷ்டமாக இருந்தாலும் நல்லதையே செய்ய வேண்டும். இதனால் தெய்வ பலம் உண்டாகும். இந்த தெய்வ பலத்தை நீங்கள் பெற முடியும்.

---



# ஆசார்யர் பேசுகிறுர்

# 3

'ஆசார்ய தேவோ பவா' என்கிறது வேதம். அன்னை தந்தைக்குப் பின் முக்கிய இடம் பெறுபவர் ஆசார்யரே. இறைவனைப்பற்றி முதலில் நீங்கள் தெரிந்துக்கொள்ள வேண்டியதைக் கூறி விடுகிறேன். பின்னர் அவர்கள் பேசுவதை நீங்கள் கேட்கலாம்.

இந்த உலகம் முழுவதையும் நடத்துபவர் ஸ்வாமி. ஒரு பெரிய குடும்பம்தான் உலகம். நம் குடும்பம் ஒவ்வொன்றிலும் அப்பா அம்மா இருக்கிருர்கள். குடும்பம் நடத்த பணம் வேண்டும். அப்பா சம்பாதிக்கிருர், அம்மா சமைக்கிருள். சில பேர் வீட்டில் அம்மாவும் அப்பாவும் சம்பாதிக்கிருர்கள்.

சுவாமி ரொம்பப் பெரியவர். ஆகவே ஒருவர் சம்பாதிக்க வேண்டும். ஒருவர் சமைக்க வேண்டும் என்பது போல் இல்லாமல் எல்லா வேலைகளையும் அவரே செய்து விடுகிருர்.

அவர் சாமான்கள் வாங்க எங்கேயும் போகவேண்டாம். எல்லா சரக்குகளும் அவரே. நம் அப்பா அம்மா காட்டும் அன்புக்கு மூலமும் அவரே.

நம் சந்தோஷத்திற்காக நம் அப்பாவும் அம்மாவும் எவ்வளவோ கஷ்டங்களைத் தாங்கிக் கொள்கிருர்கள். நாம் நல்லவர்களாக வேண்டும். நாம் வாழ்க்கையில் நன்கு முன்னேற வேண்டும் என்பதே அவர்கள் லட்சியம். இதற்காகவே சில சமயம் நம்மைக் கண்டிக்கிருர்கள்; தண்டிக்கிருர்கள். இதைக் கொண்டு நாம் அவர்களிடம் கோபப்படக்கூடாது. அவர்கள் கோபத்துக்குக் காரணம் நம்மிடம் உள்ள அன்புதான்.

அப்பா அம்மாவை ஸ்வாமியாக நினைக்க வேண்டும். இதையே மாற்றி ஸ்வாமியை அப்பா அம்மாவாக நினைக்க வேண்டும்.

பார்வதி என்ற அம்மாவாகவும் பரமசிவன் என்ற அப்பாவாகவும் அவர் ஆகியிருக்கிறார். லக்ஷ்மி என்ற அம்மாவாகவும் மகாவிஷ்ணு என்ற அப்பாவாகவும் ஆகியிருக்கிறார்.

மனதில் அன்பும் சந்தோஷமும் இருக்கிறபோதுதான் புத்தி தெளிவாக இருக்கிறது. புத்தி தெளிவாக இருக்கிறபோது படித்தால் பாடம் நன்றாக ஏறும். கோபம், ஆத்திரம், அழுகை, பொறாமை எல்லாம் உண்டாகும்போது புத்தி குழம்பிப் போகிறது. அப்போது படிப்பும் ஏறமாட்டேன் என்கிறது.

தினமும் கொஞ்ச நாழி ஸ்வாமியை தியானித்தால் மனம் நல்லதாக ஆகும். புத்தி தெளிவாக இருக்கும்.

நிறைய மார்க் வாங்கி முதலில் பாஸ் செய்தாலும் நல்லவன் என்ற பெயர் எடுக்காவிட்டால் பிரயோஜனம் இல்லை. நல்ல பெயர் எடுக்காவிட்டால் பிற்காலத்தில் வாழ்க்கையில் முன்னேறவே முடியாது. நல்லவனாக இருந்தால் நமக்கும் சந்தோஷம் - மற்றவர்களுக்கும் சந்தோஷம்.

சின்ன வயதிலேயே சுவாமியைப் பிடித்துக்கொள்ள வேண்டும். வயதாக ஆக வேறு பலவித ஆசைகள் வந்து ஸ்வாமியை நினைக்க வொட்டாமல் செய்துவிடும்.

வாழ்க்கையில் நல்ல நிலைமைக்கு வரவேண்டும் என்பது எதற்காக? பிறருக்கெல்லாம் உதவுவதற்காகத்தான்.

நீங்களே சாப்பிடுவதைவிட ஒரு ஏழைக்கு சாதம் போட்டால் அதில் உங்களுக்கு அதிக இன்பம் உண்டாகும்.

அவ்வப்போது கோபம் பொறாமை முதலியவை வரத்தான் செய்யும். அவைகளை கட்டுப்படுத்தப் பழக்கிக் கொள்ளவேண்டும்.

உடம்பு சுத்தமாக இருக்கவேண்டும். உடையும் சுத்தமாக இருக்கவேண்டும். மனமும் சுத்தமாக இருக்கவேண்டும்.

மனதில் எப்படி அழுக்கு படிகிறது? தப்பு தவறு செய்வதுதான் உள்ளத்தில் அழுக்குபடிவது. கெட்ட காரியங்கள் செய்யக்கூடாது. ஆனால் நல்ல காரியங்கள் செய்கிறபோதும் சில தப்பு தவறுகள் நேரலாம். நாமே எல்லாம் செய்துகொள்ள முடியும் என்று கர்வப்படாமல் பகவான் துணையால்தான் எதையும் சாதிக்கமுடியும் என்று

நாம் உணருவதற்காகவே இப்படிச் சில தவறுகள் நேர்ந்து விடுகின்றன. இம்மாதிரி சமயங்களில் பகவானை வேண்டிக் கொள்வதுதான் சரி.

ஒரு தப்பு செய்துவிட்டால் மனதை உறுத்துகிறது. அதை யாரும் தெரிந்துக்கொள்ளக்கூடாது என்று மூடி மறைக்கிறீர்கள்.

ஒரு தப்பு செய்தவுடன், 'ஐயோ தவறு செய்துவிட்டோமே' என்று பிரார்த்தித்தால் சோப்பு அழுக்கை அகற்றுவதுபோல பிரார்த்தனை அந்த அழுக்கை அகற்றிவிடும்.

ஒரு பொய்யை மறைக்க ஒன்பது பொய் சொல்லவேண்டி வரும்.

பொய், சிரங்கு என்றால் பயம் சொறி மாதிரி. பயம் அனாவசியத்திற்கெல்லாம் கூடாது. பயம் உள்ளத் தூய்மையைக் கெடுத்து விடும். உள்ளதைச் சொன்னால் அதை பெரியவர்கள் மன்னித்து விடுவார்கள். மன்னிக்காமல் அவர்கள் தண்டித்தாலும் அதனால் கெடுதல் இல்லை. தண்டிக்க அவர்களுக்கு உரிமை உண்டு. அப்படி அவர்கள் தண்டிப்பது நமது நன்மைக்கே,

கர்வம் என்பது பெரிய நோய். இதையும் அண்டவிடக் கூடாது. இந்த அழுக்குகளை எல்லாம் நீக்குவது சுவாமியிடமுள்ள பக்தி ஒன்றே.

சின்ன வயதிலேயே இந்த பக்தி என்ற விதை ஊன்றப்பட வேண்டும். உள்ளத் தூய்மையை சிறு வயதிலிருந்தே பெறுவது எளிது.

எந்தப் பெரியவர்கள் எந்த நன்மையைச் சொல்லியிருந்தாலும் வேதத்தில் அது ஒரு மூலையில் இருக்கும். அதைத் தவிரத் தனியாக ஒரு உண்மை இல்லை.

சிறுவயதிலேயே கணபதி மந்திரம், வாக்வாதினி மந்திரம் உபதேசம் பெறுங்கள். காலையில் எழுந்ததும் நாராயண நாமத்தை 16 தடவையும், மாலை அஸ்தமன வேளையில் சிவசிவ நாமத்தை எட்டு தடவையும் சொல்லுங்கள்.

மாதா பிதாவுக்குப்பின் பூஜிக்க வேண்டியவர் ஆசார்யர். நீங்கள் கடைத்தேற அவர் வழி காட்டுவார்.

நமக்கு மூன்று குணங்கள் உண்டு. சாத்விகம், ராஜஸம், தாமஸம். சாத்விகம் மட்டும் உள்ளவர்கள் தேவர்கள். தாமஸம்

மட்டும் உள்ளவர்கள் ராக்ஷஸர்கள். நம்மிடம் மூன்றும் கலந்துள்ளன. இம்மூன்று குணங்களில் சிறுகச் சிறுக இரண்டை நீக்கி சாத்வீகத்தை மட்டும் கைக்கொள்ள வேண்டும். இதுவே மோக்ஷமடையும் நிலை. இம்மூன்று குணங்களும் கலந்த நம் முன்பு பகவான் ஒருநாளும் பிரத்யக்ஷமாகமாட்டார்.

"தெய்வம் மனுஷ ரூபேண". இறைவன், மனித ரூபத்தில் குருவாகத்தான் தோன்றுவார். இதனால்தான் எதையுமே குரு முகமாக மேற்கொள்ளவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

குரு என்பதில் 'கு' இருளையும், 'ரு' ஒளியையும் குறிக்கும். அக்ஞானத்தை விழுங்கும் பிரும்மம் குருவே.

'கு' மாயை முதலியவற்றின் குணங்களையும் 'ரு' மாயையினால் ஏற்படும் மயக்கத்தைப் போக்கடிக்கும் பிரும்மம்.

குருவே பிரும்மா, குருவே விஷ்ணு, குருவே மகேஸ்வரன், குருவே பரப்பிரும்மம்.

குருவைக் காட்டிலும் அதிகமான தத்துவம் இல்லை. அதிகமான ஞானமும் இல்லை.

தியானத்திற்கு மூலம் குருவின் உருவம். பூஜைக்கு மூலம் குருவின் பாதம். மந்திரத்திற்கு மூலம் குருவின் வாக்கியம். முக்திக்கு மூலம் குருவின் கிருபை.

ஒரு விளக்கு இன்னொரு விளக்கை ஏற்றுவதுபோல பிரும்ம பாவத்தைத் தானும் பிரகாசப் படுத்திக்கொண்டு சிஷ்யனையும் பிரகாசிக்கும் தன்மையுள்ளவர் [பிரதிபா] குரு.

## சிஷ்யனின் சில கேள்விகளுக்கு குரு அளித்த பதில்

சகல தேவதாஸ்ரூபியாயிருப்பது எது ?

வேதம், அதிலுள்ள கர்மாக்கள்.

குலத்தை அழிப்பதற்கு எது காரணம் ?

ஸாதுக்களை தாபப்படும்படி செய்வதாகும்.

யாருடைய சொற்கள் வீணாகாது ?

சத்தியம், மௌனம், இந்தரிய ஜயம் இவைகளுடன் கூடினவர்களாக இருப்பவர்களின சொல்.

மித்யை [பொய்] எது ?

பிரம்ம ஞானத்தினால் அழியக்கூடியது.

பயனை அளிக்காதது எது ?

முயல் கொம்பு போன்றவைகள்.

விவரித்துக் கூறமுடியாதது எது ?

மாயை.

மாயையால் கல்பிக்கப்பட்டது எது?

இரண்டாவது வஸ்து.

எது பாரமார்த்தமாக உள்ளது ?

அத்வைதம்.

அக்ஞானம் எப்போது உண்டாயிற்று ?

அதற்கு ஆதியில்லை.

சரீரத்தை வளர்த்து வருவது எது ?

பயனைக் கொடுக்க ஆரம்பித்த ப்ராப்த கர்மம்.

அன்னத்தைக் கொடுப்பது எது ?

ஆயுள் [ஆயுளிருப்பதால்தான் அன்னம் செய்யப்படுகிறது].

ஜன்மத்துக்கு காரணம் எது ?

விஷயங்களில் வைத்த பற்றுதல்.

அடுத்து வரும் பிறப்பு எது ?

புத்ரன் [ஒவ்வொருவரும் தானே தன் புத்திரனுக பிறக்கிருன் என்கிறது சாஸ்திரம்].

தடுக்க முடியாதவன் யார் ?

யமன்.

எங்கு காலை வைக்க வேண்டும் ?

கண்களினுல் பரிசுத்தமான இடத்தில்.

அன்னதானத்திற்குப் பாத்திரம் யார் ?

பசியுள்ளவன்.

அர்ச்சிக்கத் தகுந்த மூர்த்தி எது ?

அவதாரங்களைச் செய்த பகவானுடைய மூர்த்தி.

அந்த பகவான் யார் ?

சங்கரனுகவும் நாராயணனுகவும் இருக்கும் மஹேசன்.

பகவானிடத்தில் பக்தி செய்வதன் நோக்கம் என்ன ?

அவனுடைய லோகத்தையும் ஸ்வரூபத்தையும் நேரில் பார்ப்பதற்கு.

எது மோக்ஷம் ?

அஞ்ஞானத்தின் நாசமே.

எல்லா வேதங்களுக்கும் உற்பத்தி ஸ்தானம் எது ?

ஓம் என்னும் பிரணவம்.

எக்காலத்திலும் அழியாமல் சத்தியமாய் இருப்பது எது ?

பரப்பிரும்மம்.

ஆசார்யர்களில் பல பிரிவு உண்டு.

அத்யாயகர், உபாத்யாயர், ஆசார்யர், குரு.

அத்யாயகர்—அத்யயனம் செய்விப்பவர். முதலில் ஒருவர் சொன்ன பிறகு, மற்றவர்கள் சொல்வர். முதலில் சொல்லிக் கொடுப்பவரே அத்யாயகர்.

உபாத்யாயர் : வேதத்தைக் கற்பிக்கும் ஆசார்யர்.

ஆசார்யர் : சிஷ்யனுக்குப் போதித்து அதன்படியே தானும் நடத்திக் காட்டுபவர்.

குரு : அக்ஞானத்தை நீக்குபவர். பிரும்மத்தை அறிந்தவர்.

ஆசாரிய பணிவிடை ஞானிகளின் லக்ஷணங்களில் ஒன்று. குருவைப் பணிந்து, பணிவிடை செய்வது 'சாரீரத்துவம்' எனப் படும். குருவை ஒரு மத்யஸ்தராகவும் கூறலாம். ஈஸ்வரனைக் காணுமுன் இத் திவ்ய தரிசனத்தின் முதல் அங்கமாக குருவைதான் சிஷ்யன் காண்கிறான். பின் அக் குருவே ஈஸ்வரனாக மாறுகிறார்.

குருவருளுடன் திருவருளும் சேர்ந்தால் சாந்தி கிட்டும். ஒருவன் தன் முதுகை தானே பார்க்க முடியாது. இரண்டு கண்ணாடிகள் எதிருக்கு எதிர் இருந்தால் பார்த்துக் கொள்ளலாம்.

ஒரு கண்ணாடி குரு அருள்.

ஒரு கண்ணாடி திரு அருள்.

---



# கணபதி பேசுகிருர்

# 4

என்னை உங்கள் எல்லோருக்கும் தெரியும். முன்காலத்துக் குழந்தைகள் களிமண்ணுல் ஆன என்னை பூஜித்துவிட்டு, ஆற்றிலோ, குளத்திலோ கொண்டு போட சப்பரம் கட்டி அதில் என்னை வைத்து இழுப்பார்கள். பாட்டு, சுலோகம் எதுவும் கூறத் தெரியாத சிறுவர் சிறுமியர், ''இட்லி இட்லி கோவிந்தா, வீராசாமி கோவிந்தா'' என்று குதூகலமாகக் கூச்சலிட்டு எடுத்துச் செல்வர். அந்தக் காலம் இப்போது மலையேறி விட்டது.

என்னை நீங்கள் ஒரு தினங்கூடப் பார்க்காமல் இருக்கமுடியாது. ஆற்றங்கரையில், முச்சந்தியில், தெருக்கோடியில் எங்கும் கோவில் கொண்டிருக்கிறேன்.

என்னைப் பூஜிப்பது மிக எளிது. தலையில் குட்டிக்கொண்டு இரு தோப்புக்கரணம் போட்டு விட்டுப் போனுல் போதும். முடிந்தவர்கள் இரு அருகம்புல்லையும் எருக்கம்பூவையும் சமர்ப்பித்தாலே போதும். மிகவும் ஆனந்தப்படுவேன்.

எந்தக் காரியத்திலும் முதல் பூஜை எனக்குத்தான். என்னைப் பூஜிக்க விக்ரகம் சக்ரம் தேவையில்லை. மஞ்சள் பொடியைக் கொஞ்சம் எடுத்து அதில் சிறிது தண்ணீர் விட்டுப் பிடித்து வைத்தால் அங்கேயே பிரசன்னமாகி விடுவேன். இதனுல்தான் ''பிடித்து வைத்தால் பிள்ளையார்'' என்ற வழக்குச் சொல் ஏற்பட்டுள்ளது.

பிருத்வி தெய்வம் நான். பிருத்வி என்ருல் மண். அதனுல்தான் களிமண்ணுல் என்னை உருவாக்கிப் பூஜிப்பது விசேஷம் என்று சொல்கிருர்கள்.

கொழுக்கட்டை எனக்கு மிகவும் பிடிக்கும், எனக்கு முதன் முதலில் இந்தக் கொழுக்கட்டையை செய்து சமர்ப்பித்தவர் வசிஷ்டரின் மனைவியான அருந்ததி. கொழுக்கட்டை மேல்பக்கம்

வெள்ளையான மாவும் உள்பக்கம் பூர்ணமும் இருக்கும். தூயமனமும் அதனுள் அமிர்தம் போன்ற கருணையும் இருக்கவேண்டும்.

எனக்கு எவ்வளவோ பெயர்கள். இவ்வளவிலும் என்னை பிள்ளையார் என்று அழைப்பதே மிகவும் பிடித்திருக்கிறது.

எந்தக் காரியமும் எவ்வித தடங்கலுமில்லாமல் நடைபெற வேண்டுமல்லவா? என்னை நினைத்து எந்தக் காரியமும் ஆரம்பி யுங்கள். ஒருவித விக்னமும் வராமல் நான் பார்த்துக் கொள்கிறேன்.

என் அப்பா என்னை மதிக்காமல் திரிபுரதகனம் செய்ய தேரில் ஏறிக்கொண்டு போனார். அவர் ஏறிச்சென்ற தேரின் அச்சு முறிந்து விட்டது, அவர் தவறை உணர்ந்தார்.

என் தம்பி அக்குறப்பெண் மீது அபாரக் காதல் கொண்டு அவள் தயவு பெற முடியாமல் தவித்தான். அவன் என் உதவியை நாடினான். அப்பெண் வள்ளிக்கு யானை என்றால் பயம். அவள் முன் யானையாகத் தோன்றிப் பிளிரினேன். ஓடிப்போய் பயத்தில் என் தம்பியைக் கட்டிக்கொண்டு விட்டாள். அவர்கள் திருமணம் செய்துக்கொண்டனர்.

என்னை நம்பினவர்கள் யாரையும் நான் நட்டாற்றில் விட்ட தில்லை.

இந்த முருகன் இருக்கிறானே, இவனுக்கு என்னோடு வம்புக்கு வராவிட்டால் பொழுதுபோகாது. ஒரு நாள் என் துதிக்கையை அவன் கையினால் முழம் போட்டான். நான் சும்மாயிருப்பேனா அவனுடைய பன்னிரண்டு கண்களை எண்ணினேன். இதைப் போய் பெரிசா அப்பா அம்மாகிட்ட போய் புகார் செய்தான். அப்பாவும் அம்மாவும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

ஒரு நாள் அப்பாவும் அம்மாவும் என்னை வைத்துக் கொஞ்சிக் கொண்டிருந்தனர். இரண்டு பேரும் ஒரே சமயத்தில் என்னை முத்தமிட முயன்றனர். சடக்கென்று தலையை பின்னே இழுத்துக் கொண்டேன். ஐயையே! அப்பாவும் அம்மாவும் முத்தமிட்டுக் கொண்டனர். அப்பாவுக்கு என் மேல் ரொம்ப திருப்தி, அம்மா வுக்கு பொய் கோபம்.

என் அப்பா ஒரு நாள் ஒரு போட்டி வைத்தார். எல்லா உலகங் களிலும் சுற்றிக் கொண்டிருப்பாரே வீணையை கட்டி தொங்கப் போட்டுக்கொண்டு அவர்தான் நாரதர். அவர் வந்து ஒரு மாம் பழத்தை என் அப்பாவிடம் கொடுத்துவிட்டுப் போய்விட்டார்.






இந்த மாம்பழம் முழுசாகவேநான் தரமுடியும். நீயும முருகனும் இந்த உலகத்தை யார் முதலில் சுற்றி வருகினீர்களோ அவர்களுக்கே இதைத் தருவேன் என்ருர் அப்பா. இந்த முருகன் இதோ வரேன் என்று சொல்லி மயில் மீதேறி உலகை சுற்றப் போய்விட்டான்.

என்னுலேயே என் உடம்பைத் தூக்கிக்கொண்டு உலகைச் சுற்றிவர முடியாது. ஒரு யோசனை செய்தேன். அப்பாவையும் அம்மாவையும் ஒரு பிரதக்ஷிணம் செய்தேன். "தாங்க பழத்தை" என்றேன். "என்னடா இது?" என்ருர் அப்பா. ஆமாம்பா நீயும் அம்மாவும் தானே இவ்வுலகம். நீ சிவம் அம்மா சக்தி. சிவமும் சக்தியும் சேர்ந்து இணைந்தால்தானே இந்த உலகமே இயங்குகிறது.

ஆகவே உங்களிருவரையும் சுற்றியதன் மூலம் உலகையே சுற்றி வந்துவிட்டேன்" என்றேன்.

"பொல்லாதப் பயல்" என்று சிரித்துக்கொண்டே பழத்தை எனக்குக் கொடுத்துவிட்டார் அப்பா.

பழத்தை சாப்பிடலாம் என்று நினைத்தபோது உலகத்தை சுற்றிவிட்டு முருகன் வந்துவிட்டான். பழம் என் கையில் இருப் பதைப் பார்த்து அவனுக்கு ரொம்பக் கோபம். "எனக்கு எதுவும் வேண்டாம் போ" என்று துணிமணி நகை எல்லாவற்றையும் கழற்றி எறிந்துவிட்டு நான் ஆண்டியா போறேன் போ என்று போக ஆரம்பித்தான். அப்பா இதெல்லாம் பார்த்து மிரண்டுவிடவில்லை. 'கம்' என்று சும்மா இருந்தார். அம்மாவுக்குத்தான் பெற்ற மனம் அடித்துக் கொண்டது "நீயே பழமாச்சே உனக்கு எதற்கடா அந்தப் பழம்?" என்றெல்லாம் சொல்லிப் பார்த்தாள். போனவன் போனவன்தான். தலையை மொட்டையடித்துக்கொண்டு கையில் ஒரு தடியைக் கொண்டு தண்டபாணியாக பழனிமலைக்கு போய் விட்டான். போட்டி என்ருல் வெற்றியும் இருக்கும் தோல்வியும் இருக்கும். இதற்கெல்லாம் இப்படிக் கோபித்துக் கொள்ளலாமா?

யானை முகம் எனக்கு. மக்கள் மாக்களுக்குள் உருவத்தாலும் அறிவாற்றலாலும் சிறந்து விளங்குவது யானை. 120 வயது வரை வாழக்கூடியது. எவ்வளவோ வலிமை பெற்றிருந்தாலும் ஒரு கட்டுக்குட்பட்டு அடங்கி நடக்கும் இயல்புடையது. விரிந்த மனத் திற்கும் நிறைந்த உருவிற்கும் உருவம் கொடுக்க யானையை விட்டால் வேறு எதுவும் இல்லை.

மனித வர்க்கத்தின் நல்வளர்ச்சிக்கு மிகவும்ஆதரவாக உள்ளது குழந்தைப் பருவம். இக்குழந்தை பருவம் நன்கு அமைந்தால்தான்



மற்ற பருவங்களும் நன்கு அமையும். என்னை பால கணபதியாக வழிபடும் ரகசியம் இதுவே. எனக்குசித்திபுத்தி என்று இரு மனைவிகள். மனிதன் பிறப்பதே சித்தி பெறுவதற்கு. இந்த சித்தி பெறுவதற்கு புத்தி வேண்டும்.

என்னை பிரும்மச்சாரி என்றும் சொல்கிறார்கள். அதுவும் உண்மையே.

எந்த பெண்ணைப் பார்த்தாலும் அம்மா மாதிரியே எனக்குத் தோன்றுகிறது. யாராவது அம்மாவை கலியாணம் செய்துக் கொள்வார்களா ?

என்னை 21 நாமாக்களால் பூஜிப்பதை நான் விரும்புகிறேன். 21 பத்திரம், 21 புஷ்பம், 21 அருகம்புல், 21 கொழுக்கட்டை, 21 அதிரஸம், 21 பழம் இவ்விதம் எல்லாம் 21 ஆகவே இருக்க வேண்டும்.

ஏன் இந்த 21 தெரிய வேண்டாமா ?

ஞானேந்திரியம் 5, அதன் காரியம் 5, கர்மேந்திரியம் 5, அதன் காரியம் 5, மனம் 1 ஆக 21.

மனதுடன் சேர்ந்த ஞானேந்திரியம், மனதுடன் சேர்ந்த கர்மேந்திரியம். இவை கட்டுக்கடங்காவிட்டால் பூஜை செய் வதிலோ உபாசனை செய்வதிலோ அர்த்தமில்லை. இந்த நினைப்பு அடிக்கடி வரவேண்டும் என்பதற்காகவே எல்லாம் 21 ஆக இருக்க வேண்டும்.

நன்றாக எரியும் அடுப்பில் ஜலம் வைத்தால் ஜலம் சீக்கிரம் சுண்டிவிடும். சூரிய வெப்பத்தில் ஜலம் ஆவியாக சில நாட்கள் ஆகும். தீவிரமான முயற்சியால் தான் ஞானத்தை அடையமுடியும். இதற்கு குருவின் அருளும் உபாசனாமூர்த்தியின் அருளும் தேவை.

என்னை நம்பி நன்றாகப் படியுங்கள். கட்டாயம் உங்களை கைதூக்கி விடுவேன்.

இம்மாதிரி கைதூக்கி விட்ட சம்பவம் ஒன்றையும் சொல் கிறேன். சுந்தரமூர்த்தி என்றவரும் அவர் நண்பர் சேரமானும். ஒருவர் யானையிலும் குதிரையிலும் கைலாசம் பிரயாணமாயினர். ஔவைப் பாட்டிக்கும் அவர்களுடன் போகவேண்டும் என்ற ஆசை. அப்போது என்னை பூஜித்துக் கொண்டிருந்தாள். அவர்க ளுடன் போகவேண்டும் என்பதற்காக அவசரமாக பூஜை செய்தாள். "ஔவையே நிதானமாக பூஜை செய். அவர்கள் கைலாசம் போய்

சேருததற்கு முன்பே உன்னை அங்கு கொண்டு சேர்க்கிறேன்'' என்றேன். சொன்ன சொல்படியே பூஜை முடிந்ததும், எனது துதிக்கையான கையில் அவளை உட்கார வைத்து கைலாசத்திற்கு அனுப்பி விட்டேன்.

ஆகவே, நிச்சயமாக கைதூக்கி விடுவேன். நீங்கள் என்னை நம்பலாம்.

நான் பூதமாய், தேவராய், விலங்காய், ஆணாய், பெண்ணாய், உயர்திணையாய் அஃறிணையாய் எல்லாமாய் விளங்குகிறேன்.

ஒரு கொம்பு, இருசெவிகள் மூன்றுக் கண்கள் நான்கு தோள்கள் ஐந்து கரங்கள் ஆறு எழுத்துக்களை உடையவன். ஏழு பிறவிகளை நீக்கி எண்திசைகளும் பெற சம்பத்துடன் வாழ என்னை வழிபட்டால் போதும்.

அமிர்த கலசம் வைத்துள்ள கை ஆக்கும் தொழிலையும், மோதகம் ஏந்திய கை காப்பாற்றும் தொழிலையும் அங்குசம் ஏந்திய கை அழிக்கும் தொழிலையும் பாசம் ஏந்திய கை மறைத்தல் தொழிலையும் தந்தம் ஏந்திய கை அருளலையும் செய்கின்றன.

என்முன் குட்டிக்கொண்டு தோப்புக்கரணம் போட்டால் போதும். தோப்புக்கரணம் போடுவதால் அறிவு வளர்ச்சியும் உடல் நலமும் உண்டாகும். என்னிடமிருந்து பெருகும் மும்மலங்களே இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி.

உலகிலேயே ஏட்டில் எழுதிய முதல் ஆள் நான்தான். வியாசர் இயற்றிய பாரதத்தை நான் அவர் சொல்ல எழுதினேன்.

எனக்கு (பெருச்சாளி) 'மூஷிகம்' வாகனம். மூஷிக என்றால் எலி. வெளியே ஒரு பாம்பைக் கண்டு விட்டால் எலி கீச் கீச் என்று மற்ற எலிகளுக்கு எச்சரிக்கை கொடுத்துவிடும். மனிதனிடமுள்ள காம உணர்வு மண்ணைக் குடைந்து வாழும். எலி அங்கு வாழ்பவர் மூலதாரக் கணபதி என்ற நானே.

நான் மூஷிகத்தில் ஏறிவரும்போது சிரசில் நாதம் உதிக்கிறது. மூலாதாரத்தில் சுழுமுனை என்ற நாடியின் அடிப்பாகம் மூடியிருக்கிறது. காற்று அழுத்தம் காரணமாக அந்த மூடி திறக்கப்படுகிறது. இந்த காற்றே மூஷிகம் எனப்படுகிறது.

என்னை மிக விசேஷமாகக் கொண்டாடுவது மகாராஷ்டிரத்தில் தான்.



# சூரியன் பேசுகிறுர்

# 5

என்னை உங்கள் எல்லோருக்குமே தெரியும். பொழுது விடிந்ததும் கீழ்வானில் செக்கச் செவேலென்று பெரிய பந்துமாதிரி தோன்றுவேன். அதே மாதிரி மாலை அஸ்தமிக்கிற வேளையில் மேற்கு திக்கில் என்னை பார்க்கலாம். மற்ற சமயங்களில் என் ஒளிப் பிரகாசம் உங்கள் கண்களைக் கூசும். பார்க்க முடியாது.

என்னுல்தான் பொழுது விடிகிறது. அஸ்தமிக்கிறது என்பதெல்லாம் வீண் பிரமை. கால நியதிப்படி எல்லாம் திட்டமிட்டு நடக்கிறது. நீங்கள் வசிக்கும் பூமி சுற்றிக் கொண்டிருப்பதால் பகல் இரவு மாறி மாறி வருவதாக தெரிகிறது.

என் கிரணங்களில் எவ்வளவோ அருமையான சக்திகள் இருக்கின்றன. இவை உலகத்தில் வாழும், மனிதன், பிராணி, பக்ஷி, செடி கொடி எல்லா ஜீவராசிகளுக்கும் மிக முக்கியம்.

வானவெளியில் ஏராள விண்மீன்கள் உள்ளன. இதை மீன் மண்டலம் [Galaxy] என்கிருர்கள்.

ஆயிரங்கோடி ஒளி ஆண்டுகளுக்கு அப்பால் இருக்கும் சில விண்மீன்களிலிருந்து ஒவ்வொரு விநாடியும் வெளிப்படும் மின்சக்தியின் அளவு நம் பூமியின் மின்சாரத் தேவையை கோடிக்கணக்கான ஆண்டுகளுக்கு பூர்த்தி செய்யப் போதும்.

இப்படி பல கோடி அண்டங்கள் ஒன்றுடன் ஒன்று மோதாமல் இயங்கி வருவதை தாயுமானவர் பின்வருமாறு பாடியிருக்கிருர்.

மண்டலத்தின் மிசைஒருவன் செய்தவித்தை
அகோனெனவும் வாரனுதி
அண்டருவை அடுக்கடுக்காம் அந்தரத்தில்
நிறுத்தும் அவதானம் போல்
எண்டருதல் அகிலாண்ட கோடியைத்தன்
அருள் வெளியில் இலகவைத்துக்
கொண்டு நின்றஅற்புதத்தை எவராலும்
நிச்சயிக்கக் கூடாத ஒன்றை.

இயற்கையின் இக் காட்சியிலே இறைமையின் மாட்சியைக் காணும் ஞானக் கவிஞர் பாரதியார் பாடுகின்ருர்.

விண்டுரைக்க அறிய அரியதாய்
விரித்தவான வெளியென நின்றனை
அண்டகோடிகள் வானில் அமைத்தனை
அவற்றில் எண்ணற்றவேகம் அமைத்தனை
மண்டலத்தை அணுவணு வாக்கினுல்
வருவது எத்தனைஅத்தனை யோசனை
கொண்டதூரம் அவற்றிடை வைத்தனை
கோலமே நினைக்காளி என்றேத்துவேன்.

என்னைத் தாமரை மலரின் காதலனுகப் புலவர்கள் வருணிக்க லாம். சித்திரத்திற்கு ஏற்ற பொருளாக ஓவியன் என்னை மதிக்க லாம். ஆனுல் விஞ்ஞானிகளுக்கு நான் என்றுமே ஒரு கேள்விக் குறிதான்.

பன்னிரண்டாயிரம் மில்லியன் டன் நிலக்கரியை எரித்தால் எவ்வளவு சக்தி உண்டாகுமோ அவ்வளவு சக்தி ஒரு விநாடியில் என்னிடமிருந்து வருகிறது. 500 மைல் கனத்திற்கு போர்வை போல பூமி முழுவதும் ஐஸ் கட்டி இருந்தால் என்னிடமிருந்து வரும் உஷ்ணம் ஒரு விஞடியில் எல்லாவற்றையும் உருக்கி நீராக்கி விடும். என் வெளிப்பரப்பின் உஷ்ணம் 6000 டிகிரி சென்டிகிரேட்.

உண்மையில் நான் ஒரு நட்சத்திரம்.

உயிர் வாழ்க்கைக்கே காரணமான எனக்கு எங்கிருந்து இத்தனை சக்தி வந்தது? ஏன் உண்டாகியது? எப்படி குறையாமல் இருக்கிறது ? அநேக வருஷங்களுக்கு முன்ஞல் விஞ்ஞானிகள் இவைகளைப்பற்றி தங்கள் மூளையைக் குழப்பிக் கொண்டிருந்தார்கள்.

அணுவின் உள் அமைப்புப் பற்றியும், ப்ரோட்டான் நியூட்ரான் அடங்கியுள்ள அணு மையத்தின் [Nucleus] விஞேதமான படைப் பைப் பற்றியுமுள்ள உண்மைகளை விஞ்ஞானிகள் கண்டுபிடித்த பின் இக் கேள்விகளுக்கு கிடைத்த விடை என்ன தெரியுமா ?

நான் ஒரு அணு ரியேக்டர். என்னிடமுள்ள எரிபொருள் யூரேனியம் அல்ல. ஹைட்ரஜன் [ஜலவாயு]. அணுசக்திக்கு மூலப் பொருள்கள் யுரேனியமும் தோரியமும் மட்டுமல்ல. ஹைட்ரஜன் அணுக்களும் சிறந்த எரிபொருள்கள். பொதுவாக அணுசக்தியை உண்டுபண்ண இரண்டு வழிகள் இருக்கின்றன. முதலாவது யுரேனியம் போன்ற கனமுள்ள அணுக்கள் குறைந்த எடையுள்ள இரண்டு அணுக்கூறுகளாகப் பிளக்கப்படும்போது உண்டாகும் ஏராளமான சக்தி. இதற்குத் தான் அணுச் சிதைவு [Nucleas Fishsion] என்று பெயர். இந்தத் தத்துவ அடிப்படையில் தான், உலக மெங்கும் அணுசக்தி நிலையங்கள் அமைக்கப்பட்டு வருகின்றன.

இரண்டாவது வகையில் ஹைட்ரஜன் போன்ற லேசான அணுக்கள் ஒன்று சேர்ந்து ஹீலியம் என்ற அணுக்களை உண்டு பண்ணும். இந்த அணு நிகழ்ச்சிக் கு அணு சேர்க்கை [Nucleas Fusion] என்று பெயர். அணு சேர்க்கை மூலம் வெளிப்படும் சக்தி வியக்கத்தக்கது.

இந்த இரண்டாவது சேர்க்கை முறையே என் சக்திக்கு காரணம் என்பது இப்போது கண்டுபிடித்திருக்கிறார்கள்.

நீங்கள் வசிக்கும் பூமியின் குறுக்களவு 8000 மைல். இது ஒரு பந்துபோல மணிக்கு 1000 மைல் வேகத்தில் சுற்றிக் கொண்டிருக் கிறது. இந்த பூமியைவிட நான் 13 லட்சம் மடங்கு பெரியவன். எனக்கும் பூமிக்குமிடையே உள்ள தூரம் என்ன தெரியுமா? 9,28,70,000 மைல்கள். எனது குறுக்களவு 8,64,100 மைல்கள்.

எனது எடை என்ன தெரியுமா? 2 போட்டு இருபத்தேழு சைபர்கள் சேர்த்தால் எவ்வளவோ அவ்வளவு டன். 13 லட்சம் பூமிகளை என்னுள் அடக்கிக் கொள்ளமுடியும்.

திட திரவ பொருள் எதுவும் என்னிடம் கிடையாது. என்னைத் தானே சுற்றிக் கொள்கிறேன். ஒரு தடவை சுற்ற நான்கு வாரங்க ளாகும்.

நீங்கள் என்னை வழிபடத்தான் முடியும். என் அருகில் கூட வரமுடியாது.

என்னை ஒன்பது கோள்கள் சுற்றி வருகின்றன. அவை: பூமி, செவ்வாய், புதன், வியாழன் [குரு], வெள்ளி [சுக்கிரன்], சனி, நெப்டியூன், யூரேனஸ், ப்ளூட்டோ. சுக்கிரனும் செவ்வாயும் பூமிக்கு அருகிலுள்ளன.

இந்த எல்லா கோள்களையும் சேர்த்து சூரிய மண்டலம் என்றழைக்கிருர்கள்.

இதைப்போல பல ஆயிரக்கணக்கான மண்டலங்கள் பர வெளியில் உள்ளன.

ஒரு இடத்திலிருந்து இன்னெரு இடததிற்குமிடையேயுள்ள தூரத்தை இத்தனை மைல் அல்லது இத்தனை கிலோ மீட்டர் என்கிருேம். வானவெளியில் அண்டங்களுக்கிடையேயுள்ள இடை வெளியை இந்த கணக்கில் அளவிட்டுக் கூறமுடியாது. ஏனென்ருல் தூரம் மிகமிக அதிகம்.

விண்வெளியின் தூரத்தை ஒளியாண்டு என்ற அளவையினைக் கொண்டு கணக்கிடுகின்றனர்.

என்னிடமிருந்து ஒளி ஒரு விளுடிக்கு 182328 மைல் வேகத்தில் செல்கிறது. அதாவது ஏறக்குறைய 3 லட்சம் கிலோ மீட்டர் வேகம்.

நீங்கள் மட்டுமன்றி உலகிலுள்ள பல மதத்தினர்களும் என்னை வழிபட்டு வந்திருக்கிருர்கள்.

என்னை முழுமுதற் கடவுளாக வழிபட்ட காலம் உண்டு. பாபிலோன்தான் முதன்முதலில் என் கிரணங்களை ஆராய்ந்தது. பழங்கால எகிப்தியர்கள் 'ரா' 'ஆதன்' என்ற பெயரில் என்னை வழிபட்டனர்.

ஜப்பான் அரசின் சின்னம் உதய சூரியன். ஜப்பானிய அரசர்கள் எனது வழித் தோன்றல்கள். ருக் வேதம் என்னை தெய்வமாகவே குறிப்பிடுகிறது.

ரோமில் 3ம் நூற்ருண்டில் கிறிஸ்தவ மதத்தையே சௌரம் எதிர்த்து நின்றது. கி.மு. 1400-லேயே சூரிய மதம் மத்ய கிழக்கு நாடுகளில் பரவி இருந்தது.

தமிழ் நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் சூரியனுர் கோவில் என்ற ஊரில் எனக்கு ஒரு தனி ஆலயம் இருக்கிறது.

நம்முடைய பழைய சாஸ்திரங்கள் பற்றி ஒன்பது கிரகங்கள் இருக்கின்றன என்பதை யாவரும் அறிவர். இப்போது மேல்நாட்டு விஞ்ஞானிகள் புதிய கிரகங்களைக் கண்டுபிடித்து வருகிறார்கள்.

பெரிய கிரகங்களுக்கு உப கிரகங்களும் உண்டு. ஒவ்வொரு பெரிய கிரகத்திற்கும் பிள்ளைகள் உண்டு. காலன் என் பிள்ளை.

மற்ற கிரகங்களின் பிள்ளைகள் :

| | | |
|---|---|---|
| சந்திரன் பிள்ளை | | தூமம் |
| செவ்வாய் | ,, | பரிதி |
| சுக்கிரன் | ,, | வியதிபாதம் |
| ராகு | ,, | இந்திரசாபம் |
| கேது | ,, | தூமகேது |
| சனி | ,, | குளிகன் |
| புதன் | ,, | அர்த்தப் பிரகரன் |
| குரு | ,, | எமகண்டம் |

ஸ்ரீ ராமர் அவதரித்தது என் குலத்தில்தானே.

ஆதிகால ரிஷிகளின் அபிப்பிராயப்படி சந்திரன், பூமி இவைகளின் ஆகர்ஷண சக்தி ஒன்றையொன்று இழுக்க இரண்டும் ஒட்டிக் கொண்டன.

தேவகுருவும், அசுர குருவும் சந்திரனை மத்தாக பாவித்து சுழற்றி இழுக்க, அதற்கு சுழலும்படியான தன்மை உண்டாகி பூமியை விட்டுப் பிரிந்தது. ஏன் இவர்கள் இருவரும் இதில் முனைந்தார்கள்? குரு புத்திரர்களான சுக்கிரன் களத்திரகாரகன். இதன் பேரிலேயே பிரஜா உற்பத்தி பூமியில் துவங்கியது. இதன் காரணமாக முதலில் ஏற்பட்டது விஷம். இதுவே ராகு, கேது.

என்னை நாராயணனின் அம்சம் என்பார்கள். சூரிய நமஸ்காரம் செய்வது உடலுக்கு நல்ல ஆரோக்கியத்தைத் தர வல்லது. திறந்த வெளியில் தினமும் சூரிய நமஸ்காரம் செய்யுங்கள். இதனால் காசு பணம் செலவில்லை. நிச்சயம் பலன் உண்டு.

## சூரியன் தொடர்புடைய சில வாக்கியங்கள்

against the sun : வலமிருந்து இடமாக

a place in the sun : நல்ல வாய்ப்பான நிலை

hail the raising sun : புதிதாக ஆட்சிக்கு வந்தவர்களைப் புகழ்ந்து கொண்டாடு !

his sun is set : வளமான காலம் முடிந்துவிட்டது.

hold a Candle to the sun : (பழமொழி) தேவைக்கு மேற்பட்ட செயல் செய்.

see the sun : உயிரோடிரு !

sun of righteousness : இயேசு பெருமான்

take the sun : ஞாயிறு ஒளிபடும்படி மேலுடையின்றியமர்.

under the sun : உலகில்

sundance : சூரியனைப் போற்றி வட அமெரிக்க இந்தியர்கள் ஆடும் ஆட்டம் !

---



---

# விஷ்ணு பேசுகிருர்



# 6

இந்த உலகை காப்பாற்றும் சக்தி என்னிடம் இருக்கிறது. சிருஷ்டிப்பது ஒரு நொடியில் நடந்து விடுகிறது. சம்ஹரிப்பது ஒரு நொடியில் நடந்து விடுகிறது. ஒருவன பிறந்தது முதல் சாகும் வரை, நான்தான் அவனை ரக்ஷித்துக் காக்க வேண்டியிருக்கிறது. ஆகவே மும்மூர்த்திகளில் எனக்கு வேலை அதிகம்.

என்னைக் குறித்து வியாசர் இயற்றியுள்ள விஷ்ணு சகஸ்ர நாமத்தைப் படித்தால் போதும். உங்களுக்கு வேண்டியதெல்லாம் கிடைத்துவிடும்.

நான் பல அவதாரங்கள் எடுத்தேன். அவைகளில் பத்து முக்கியமானவை. இவைகள் ஒவ்வொன்றிலும் ஏராளமான தத்து வங்கள் பொதிந்துள்ளன. எவ்வெப்போது உலகில் தர்மம் நசித்து அதர்மம் தலை தூக்குகிறதோ, அப்போதெல்லாம் நான் அவதாரம் செய்கிறேன்.

இந்த அவதாரங்களில் ராமனுகவும், கிருஷ்ணனுகவும் நான் உருவெடுத்தது மிக முக்கியமானவை. ராமனுகப் பிறந்து தர்மத்தை எப்படி கடைபிடிப்பதென்று வாழ்க்கையை நடத்திக் காட்டினேன். கிருஷ்ணனுகப் பிறந்து கர்மம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி அர்ஜுனனை ஒரு வியாஜ்யமாகக் கொண்டு உலகினருக்கு உபதேசித் திருக்கிறேன்.

என் பிறப்புக்கும், உங்கள் பிறப்புக்கும் வித்தியாசம் உண்டு. உங்கள் பிறவி வினைப்பயனுல் ஏற்பட்டது. என் பிறவி அருள்

காரணமாக ஏற்பட்டது. சிறைக்குள் கைதியும் இருக்கிருன். சிறை அதிகாரியும் இருக்கிருன். குற்றவாளி நிலேயும் சிறை அதிகாரி நிலேயும் ஒன்று என்று கூற முடியுமா? இதை உணர்வதே அவதார ரகசியம்.

சாது ரக்ஷணம், துஷ்ட நிக்ரஹம், தர்ம ரக்ஷணம் இவைகளே அவதாரத்தின் அடிப்படையாகக் கீதையில் கூறியிருக்கிறேன். ஆனுல் இவை அவதாரத்தின் முக்கியமான நோக்கங்களேப் பூர்ண மாக பிரதிபதிப்பதில்லே. என் கிருஷ்ணுவதாரத்தில் இதைக் காட்டி லும் அதிகமான உள் நோக்கங்கள் உள்ளன. உருவமில்லாத நான் அழகான உருவத்தை எடுத்து உலகில் சஞ்சரிப்பது மனித வர்க்கத் தின் சிந்தனேக்கு ஒரு சிறந்த விருந்தாக அமைந்தது. மக்களின் மனதில் ஆழ்ந்த உணர்ச்சியை உண்டுபண்ண அழகான உருவங் கள் கொண்ட அவதாரம் பயன்படுகிறது. அவதார காலங்களில் வசித்த மக்கள் நேருக்கு நேராக இதை அனுபவித்தார்கள். பிற் காலத்தவர்கள் இந்த அவதார உருவத்தை தியானம் செய்து, நாமாக் களேச் சொல்லி லீலேகளே நினேத்து ஆனந்தப்பட்டார்கள்.

பாண்டவர்களின் தாயாகிய குந்தி இதை விளக்கியிருக்கிருள். "நீ எதற்காகப் பிறந்தாய்? இதற்கு பலர் பலவிதமாகக் கூறுகிருர் கள். சிலர் வசுதேவர், தேவகி செய்த புண்ணியம் என்கின்றனர். சிலர் பூபாரம் தீர்க்க பிறந்தாய் என்கின்றனர். தேவர்களுடைய ஹவிர்பாகம் மீண்டும் கிடைக்கச் செய்யவே நீ பிறந்தாய்" என்று சிலர் கூறுகின்றனர். ஆனுல் அவ்விதமான காரியங்களுக்கு நீ பிறந்திருந்தால் அது பயனற்றது. இதனுல் தனிப்பட்டவர்களே பயன் அடைய முடியும். கிருஷ்ணுவதாரத்தை அனுபவித்த பின் நான் கூறுகிறேன்:

"எங்களேப்போன்ற மக்கள், படுக்கையிலிருந்து எழுந்தது முதல் மீண்டும் தூங்கப் போகும் வரை சுக துக்கங்களில் உழன்று கஷ்டப் படுகிருர்கள். அதைத் தவிர்க்க முடியவில்லே. கதைகளே கேட்கும் வழக்கம் எங்களிடம் இருக்கிறது. கதைகளே கேட்டுக் களிப்பது மனிதனின் இயற்கையாகிவிட்டது. ஆகவே எங்கள் பொழுதை நல்ல பொழுதாகச் செய்ய நீ அவதாரம் பண்ணிஞய். இதுவும் ஒரு விஷயத்தில் உண்மையே."

நீங்கள் எல்லாம் படிக்கத் துவங்கும்போது [வித்தியாரம் பத்தில்] 'ஹரி: ஓம் நமோ நாராயணுய ஸித்தம்' என உங்கள் ஆசிரியரால் சொல்லி வைக்கப்பட்டீர்கள்.

ஓம் தத் ஸத் ஹரி : இவை இறைவனின் நாமாக்கள். வேதங்களை கற்கும்போதும், கற்பிக்கும் போதும் ''ஹரி: ஓம்'' என்று சொல்லியே ஆரம்பிப்பது வழக்கம்.

நானும் சக்தியும் ஒருவரே. நாங்கள் இருவரும் கூடப்பிறந்தவர்கள் என்று சொல்வதுண்டு. சிவபெருமானும் சக்தியும் இணைந்த மூர்த்தம் அர்த்தநாரீ என்பதாகும். அதுபோல சிவபெருமானும் நானும் இணைந்த மூர்த்தம் சங்கரநாராயணன் என்பதாகும்.

இப்படி இரண்டு பாதியாக ஒட்டிய ஒரே திருமேனியில் ஒரு பாதி எப்படித் தனியாக ஓடி ஒளிக்கும்? இச்சந்தேகம் காரைக்காலம்மையாருக்கு ஏற்பட்டுவிட்டது. அவர் கேட்கிறார் :

கார்உருவக் கண்டத்து எம்
கண்ணுதலே எங்கு ஒளித்தாய்
ஓர்உருவாய் நின்னோடு
உழிதருவான்—நீர்உருவ
மேகத்தால் செய்தனைய
மேனியான் நின்னுடைய
பாகத்தான் காணோமே பண்டு.

சிவபெருமானே! இந்த விஷ்ணுவை உன்னுடைய இடப்பாகத்தில் இணைத்துதானே இருந்தாய். அவ்விஷ்ணு உன்னைக் காணமுடியாமல் நீ எங்கு போய் ஒளிந்தாய் என்பது இப்பாட்டின் அர்த்தம். இது எங்கள் திருவிளையாடலில் ஒன்று. நாங்கள் இப்படித்தான் நாடகம் ஆடுவோம்.

கிருஷ்ண யஜுர்வேதம் ஆரண்யகம் முதல் பாகத்தில் காணப்படும் கேள்வி பதில்களை ''சர்வம் விஷ்ணுமயம் ஜகத்'' என்பதற்கு ஆதாரமாகக் கொள்ளலாம்.

கேள்வி : ஆகாயமும் பூமியும் ஒன்றோடொன்று தொடர்பு இல்லாமலே, எங்ஙனம் நிலைத்திருக்க முடியும் ? இவற்றின் நடுவே என்ன சக்தி உள்ளது ?

பதில் : எங்கும் வ்யாபித்துள்ள பொருளாகிய விஷ்ணுதான்—அவருடைய ஈர்ப்பு சக்தி தான் இவை இரண்டும் நிலைத்து நிற்கக் காரணமாகிறது. இந்த விஷயம் முன்பே வத்ஸர் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

கேள்வி : இப்படிப்பட்ட விஷ்ணுவினுடைய பலம் எத்தகையது ? எதனால் இவர் தனியே இந்த வேலையைச் செய்ய வலிமை பெறுகிறார் ?

பதில் : சக்தி முழுவதற்கும் முக்கிய காரணமாக விளங்குவது ப்ராணவாயு. உலகனைத்திலும் பரவி நிற்கிறது இந்தக் காற்று. இதைக் காட்டிலும் பன்மடங்கு பலம் கொண்டவர் விஷ்ணு. அவருடைய சக்தியை மனிதனுடைய ஐம்புலன்களைக் கொண்டு அளவிட்டுச் சொல்ல முடியாது என்கிறது வேதம்.

என் கஷ்டம் உங்களுக்கெல்லாம் தெரியாது. என் பிள்ளை பிரும்மாவுக்கு வேதத்தைச் சொல்லி வைத்து தவமிருப்பவர்களுக்கு வரம் கொடுக்க சக்தி அளித்தது தப்பாகப் போய்விட்டது. அவர் இந்த வரத்தை அசுரர்களுக்கு தாராளமாக வழங்கிவிட்டதால், நான் பல அவதாரம் எடுக்க வேண்டி வந்தது.

இந்த லக்ஷ்மியை அழைத்துக் கொண்டு பல வருஷங்கள் காட்டில் அலையவேண்டி வந்தது.

என் முதல் மனைவி பூதேவி. அவள் நடமாட்டமே இல்லாதவள். பாற்கடலைக் கடைந்து எடுத்த லக்ஷ்மியை மணம் செய்துக் கொண்டேன். அவளோ ஒரு இடத்திலும் நிலைத்திருப்பதில்லை. மிக சஞ்சலப் புத்தி.

மூவுலகையும் வெற்றி கொண்ட என் மகன் மன்மதனை, தான் கண்ணால் பார்க்க முடியாதபடி பரமசிவன் எரித்துவிட்டார். விசாரமில்லாமல் படுத்திருக்கலாம் என்றால் என் படுக்கை பாம்பு. படுக்கும் இடமோ சமுத்திரம். எங்காவது போய் வரலாம் என்றால் பாம்புக்குப் பகையான கருடன் என் வாகனம். ஆகாயத்தில் போய்க் கொண்டிருக்கும்போது பூமியில் பாம்பைக் கண்டால் கொத்துவதற்குத் திடீர் என இறங்கிவிடும். இந்த உபத்திரவங்கள் பொறுக்க முடியாமல் பூரி ஜகன்னாத்தில் நான் கட்டையாக நிற்கிறேன்.

இந்த விஷயங்கள் இரகசியமாக இருக்குமா? ஒரு பக்தன் இதை சுலோகமாகச் செய்து மக்களிடையே பிரபலமாக்கிவிட்டான்.

ஏகா பார்யா ப்ரக்ருதி ரசலா
சஞ்சலாச த்வீதியா
புத்ரோநங்கஸ் திரிபுவநஜயீ
மந்மதோ துர்நிவார:

சேஷ: ஶய்யா சயனமுத்திர்
வாகனம் பந்நகாரி:
ஸ்மாரம் ஸ்மாரம் ஸ்வக்ரு ஹசரிதம்
தூருபூதோ முராரி:||

என்னை மனமார காதலித்தவள் ஆண்டாள். இதற்காக அன்புடன் அவள் பாடிய வசைமொழியையும் ஏற்றிருக்கிறேன்.

"புறம்போல் உள்ளும் கரியான்", "ஏலாப் பொய்கள் உரைப்பான்", "பெண்ணின் வருத்தம் அறியாப் பெருமான்" 'நடை ஒன்றிலான்' என்றெல்லாம் என்னை அவர் குறைகூறியிருக்கிருள்.

எனக்கு 'தரித்திர நாராயணன்' என்று ஒரு பெயர். இந்த பெயர் தான் உங்கள் தேச பிதா காந்திஜிக்கு மிகவும் பிடித்திருக்கிறதாம். கோடி கோடி எளிய மக்களின் மனதில் உறையும் பெருமான் என்பதால் எனக்கு இப்பெயர் ஏற்பட்டது. மனிதனை மனிதன் மதித்து வாழவேண்டும். இதுவே நீங்கள் எனக்குச் செய்யும் பூஜை.

## ப்ரஹ்மா பேசுகிருர்

பூலோகத்தில் சட்டி, பானை செய்கிருன் குயவன். அந்த வேலையைச் செய்பவன் நான். குயவனே ஒரே மாதிரி பண்டங்களைச் செய்து விடுகிருன். நான் அப்படிச் செய்வதற்கில்லை. ஜீவாத்மாக்களை அவரவர்களின் முன்வினையின்படி பலவிதமாகப் படைக்க வேண்டியிருக்கிறது. இப்படி ஏற்பட்ட ஏற்றத் தாழ்வுகளுக்காக என்னைப் பழிக்கிருர்கள்.

நான் சிருஷ்டித் தொழிலை செய்கிறவனல்லவா? ஆகவே, சில பிறப்புக்கள் பற்றி சொல்கிறேன் கேளுங்கள் :

"இந்த உலகம் பிறந்தது ஓம்கார நாதந்திலிருந்துதான். நான் ஸ்ரீமன் நாராயணனின் நாபியிலிருந்து கிளம்பிய தாமரையில் உண்டானவன்.

அகஸ்தியர் என்ற ரிஷி, அவர்தான் தமிழ் தந்த முனிவர். ஒரு கும்பத்திலிருந்து உண்டானவர். அவருக்கு கும்பமுனி என்ற பெயரும் உண்டு.

வசிஷ்டர், நாரதர் ஆகியவர்கள் என் மனதிலிருந்து உதித்தவர்கள். புத்ரகாமேஷ்டி யாகத்தில் அக்னிதேவன் தந்த பாயஸத்தினல் உண்டானவர்கள் ராமர், லக்ஷ்மணர், பரதர், சத்ருக்னர்.

ஜனகமகரிஷி பொன் கலப்பையால் நிலத்தை உழுதபோது பூமியி லிருந்து ஜனித்தவள் சீதை.

குசத்வஜர் என்ற ரிஷி வேதாப்யாஸம் செய்யும்போது அவ ருடைய வாக்கு கன்யையாக உருவெடுத்தது. அவளே வேதவதி.

முன்பெல்லாம் சங்கல்பத்தாலும், தரிசனத்தாலும், ஸ்பர்சத் தாலும் முந்தையோர்களுடைய சிருஷ்டி நடைபெற்றிருக்கிறது. அதன்பின் உண்டாகும் பிரஜைகள் ஆண் பெண் சேர்க்கையால் உண்டானவர்கள். இப்படி ஹரிவம்சம் 2-வது சர்க்கத்தில் சொல் லப்பட்டிருக்கிறது.

என்னைப்பற்றி ஒரு துதியாவது, பூஜையாவது உண்டா? எனக்கென்று ஏதோ இரண்டொரு இடத்தில் மட்டுமின்றி வேறு எங்கும் கோவில் கிடையாது.

எனக்கு கோவில் இல்லை என்பதை காளிதாசன் கூட கேலி யாகப் பாடியிருக்கிறார்.

ராஜாவை பார்க்க விரும்பும் கவிகள், சாயனன் மாயனன் என்ற இரு பண்டிதர்கள் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லி வெற்றி பெற்றால்தான் அனுமதி கிடைக்கும். காளிதாசன் ஒரு சமயம் இந்த அரசனைக் காண வந்தார். இதற்கு முன்னதாக அவர் சாயனன் மாயனனை சந்தித்தார். அவர்கள் கேட்கும் கேள்விகளுக் கெல்லாம் பதில் அளித்தார். இவரை எப்படியாவது மடக்க வேண்டும். பிரும்மனுக்கு ஏன் கோவில் இல்லை என்று கேட்டார் கள்.

அந்த பிரும்மன் ஆட்டுக்கு தாடையில் தொங்கும்படி இரண்டு சதையையும், ஒட்டகத்திற்கு இரண்டு திமிலையும், சாயனன் மாயனன் என்ற உங்கள் இருவரையும் படைத்ததால் அவருக்கு கோவில் இல்லாமல் போயிற்று என்று ஒரு சுலோகத்தில் குறிப்பிட்டிருக் கிறார்.

எனக்கு கோவில் இல்லாவிட்டாலும் போகிறது. எல்லா ஆலய உத்ஸவங்களையும் நானேதான் நடத்தி வருகிறேன். நான்கு வேதங்களை நான்கு குதிரைகளாக பூட்டிய இறைவன் ரதத்தின் சாரதி நானே. என்னை ஏளனம் செய்வதுபோல என் மனைவி சரஸ் வதியைப் பற்றி முதன் முதலில் துதிக்கிறார்கள். போகட்டும். அவளால் எனக்கு அனுகூலம் உண்டா ?

ஒரு காலத்தில் உயிர்களைப் படைக்கும்போது ஒரு மனக்கலக்கம் இருந்தது. அப்போது தவம் செய்ய ஆரம்பித்தேன். ஆயிரம் யாகம் செய்தால்தான் கலக்கம் தீரும் என்று ஒரு அசரீரி கேட்டது.

சத்யவிரத க்ஷேத்திரத்தில் (காஞ்சீபுரம்) ஒரு யாகம் செய்தால், 1000 யாகம் செய்ததற்கு சமம் என்று. அங்கு சென்று யாகம் செய்யலானேன்.

அப்போது எனக்கும் என் மனைவிக்கும் ஒரு மனஸ்தாபம். நீங்கள் துதிக்கும் சரஸ்வதி என்ன செய்தாள் தெரியுமா ?

ஹோம குண்டத்தை அழித்து என் யாகத்தைக் கெடுக்க வேகவதி நதியாக மாறி வெள்ளம் கரைபுரள வந்தாள். என் தந்தையை நினைத்துக்கொண்டேன். அவர் கருணை கொண்டு நதியின் பிரவாகத்தைத் தடுத்து யாகத்தைக் காத்தார்.

இது உண்மையா ? கதையா ? என்று சந்தேகம் ஏற்பட்டால், பிரும்மாண்ட புராணத்தைப் புரட்டிப் பாருங்கள்.

எனக்கு முன்பு ஐந்து தலைகள் இருந்தன. அதில் ஒரு தலையைப் பறிகொடுத்த விவரத்தைச் சொல்ல எனக்கே வெட்கமாக இருக்கிறது. இருந்தாலும் நான் செய்த பிழையை நீங்களும் செய்யாமல் இருக்கலாம் அல்லவா ? ஆகவே சொல்கிறேன்.

ஒரு சமயம் எனக்கும் மஹா விஷ்ணுவுக்குமிடையே யார் பெரியவர்? சக்தி வாய்ந்தவர்? என்ற வாக்குவாதம் ஏற்பட்டுவிட்டது. இறைவனுகிய அப்பரம் பொருள் எங்களை ஆட்டி வைக்கிறது என்பதை மறந்து விட்டோம். அப்பிரும்மம் ஒரு பெரும் ஜோதியாக எங்கள் முன் தோன்றியது. இதன் அடி முடி இவைகளில் எதையாவது யார் கண்டுபிடிக்கிறுர்களோ அவர்களே பெரியவர் என்று அசரீரி கேட்டது.

மஹா விஷ்ணு பன்றி ரூபம் எடுத்து, பூமியைக் குடைந்து அடியைத் தேடப் புறப்பட்டார். நான் அன்னபக்ஷி ரூபம் எடுத்து ஆகாயம் நோக்கிப் பறந்தேன். எவ்வளவு தூரம் பறப்பது ? இறக்கைகள் சோர்வடைந்து விட்டன. அச்சமயம் ஒரு தாழம்பூ கீழ் நோக்கி வந்தது. நீ எங்கிருந்து வருகிறுய்? என்று கேட்டேன். பகவானின் முடியிலிருந்து வந்ததாக அது சொல்லிற்று. பகவான் முடியைப் பார்த்தால் என்ன ? அம்முடியிலிருந்து வரும் தாழம் பூவை பார்த்தால் என்ன ? முடியைப் பார்த்தது போலதானே என்று ஒரு பொய்யைச் சொல்லிவிட்டேன். போச்சு ஒரு தலை. இதற்கு முன் எனக்கு ஐந்து தலைகள் இருந்தன. பொய் சொன்னதற்கு தண்டனை நான்கு தலைகளாகிவிட்டது. ஆகவே பொய்யை எக்காரணம் கொண்டு சொல்லாதீர்கள்.




# முருகன் பேசுகிறார்



# 7

---

என்னவென்றாலும் அவர் முத்தண்ணா இல்லையா? அவரையே—கணபதியைத் தான் சொல்கிறேன்—முதலில் வழிபடுங்கள். தக்க சமயத்தில் வந்து உதவினார். இல்லையேல் அந்த வள்ளியை நான் கல்யாணம் செய்துகொண்டிருக்க முடியாது.

என்னைக் குன்றின்மீது கோவில் கொள்ளும் தெய்வம் என்றே பழங்காலத் தமிழர்கள் ஏற்படுத்திவிட்டனர். நான் மலைமீது தான் வசிப்பது என்றில்லை. எங்கெல்லாம் இயற்கையழகு சிறந்து விளங்குகிறதோ, அங்கெல்லாம் கோயில் கொண்டுள்ளேன். வயலிலே சோலையிலே, கடற்கரையிலே எல்லா இடங்களிலும் எனக்கு ஆலயம் அமைந்துள்ளது.

உதயசூரியனில் என் உருவைக் கண்டு நக்கீரர் பாடியிருக்கிறார். மிகப் பொல்லாத பேர்வழி. அப்பா இயற்றிய செய்யுளிலேயே குற்றம் கண்டுபிடித்து "நீர் நெற்றிக்கண்ணை காட்டினாலும் குற்றம் குற்றமே" என்று வாதித்தவர்.

அருணகிரிநாதர் எப்படி எல்லாம் என்னை அனுபவிக்க முடியுமோ, அப்படி அனுபவித்துப் பாடியிருக்கிறார். இவர் பாடாத என் கோயில்கள் இல்லை என்றே சொல்லலாம்.

இவருக்கு நான் ஆடுவதைப் பார்க்கவேண்டும் என்று ஆசை. "மயிலும் ஆடி நீயாடி வரவேண்டும்" என்பது அவர் பிரார்த்தனை. ஏனப்பா ! உன் தந்தை ஆடினால் எல்லாமே ஆடுகின்றதாமே ! நீ ஆடினாலும் அப்படித்தானா? என்று கேட்டார் அருணகிரி. "நான்

வேறு, அவர் வேரு ? நாங்கள் இருவரும் ஒன்றுதானே என்பது உனக்குத் தெரியாதா? என்று பதிலளித்தேன்.

என் தந்தைக்கு உபதேசம் செய்ததை மனதில் கொண்டு தன் கந்தரனுபூதியில், "குருவாய் வருவாய் அருள்வாய் குஹனே" என்று அருணகிரி வேண்டுகிருர்.

குருவின் பெருமை அளவிடற்கரியது.

பிரும்மா, விஷ்ணு, சிவன் என்று கூறப்படும் தெய்வங்கள் எல்லாம் குருவே. எல்லா உலகமும், எல்லா தெய்வங்களும் அவரே.

ஶிவே ருஷ்டே குருஸ் த்ராதா குரௌ ருஷ்டே ந கஶ்சந |

"தெய்வாபராதம் செய்த ஒருவன் குருவைத் தஞ்சமடைந்தால் அவர் அவனைக் காப்பாற்றி விடுவார். ஆனல் குருவுக்கு ஒருவன் அபராதம் செய்தால் பரமேசுவரனுல்கூட அவனைக் காப்பாற்ற முடியாது."

ஆசாரியரின்மூலம் கற்கும் வித்தையே நிலையானது; உயர்ந்தது. கல்வியறிவு சிறிதும் இல்லாதவனுயிருப்பினும், தாழ்ந்த நிலையில் இருப்பினும், ஒருவன் குரு சேவை செய்வதன்மூலம், அவர் அனுக்கிரஹம் பெற்று, சிறந்த புத்திமானுகி விடுகிருன். தோடகாசாரியர் ஆதிசங்கர பகவத்பாதருக்குச் சேவை செய்ததன்மூலம், அவரது அத்யந்த சிஷ்யர்களில் ஒருவராகி விடுகிருர் என்பது வரலாறு.

தெய்வ நம்பிக்கையே இல்லாதிருந்த நரேந்திரர், இராமகிருஷ்ண பரமஹம்ஸரின் அருளால் சுவாமி விவேகானந்தராக, உலகம் போற்றும் ஞானியாக ஆனுர்.

ஆகவே சஞ்சலம் நிறைந்த உள்ளத்தைச் சமநிலைப்படுத்தி அதில் இறைவனின் திருவுருவத்தை நிலைபெறச் செய்பவர் குரு.

அவரே நம்மைச் சூன்யத்திலிருந்து பூரண தத்துவத்திற்கு அழைத்துச் செல்கிருர். அறியாமை என்ற இருள் நீங்க ஞான தீபத்தை ஒளிவிடச் செய்கிருர்.

பரம்பொருளை அடையும் வழியறியாது, உழன்று திரியும் ஜீவாத்மாவிற்கு வழிகாட்டி, இடையில் வரும் தடைகளைத் தகர்த்தெறிந்து ஜீவ-ப்ரம்ம ஐக்கியத்திற்கு ஆதாரமாய் இருப்பவரே ஆசார்யர்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த குருவைத் தெய்வமாக உபாசனை செய்வது சாலவும் பொருத்தமுடையது. இறைவனைக் குருவின் உருவமாகவே தியானித்து வழிபட்டனர் நம் முன்னோர்கள்.

ஆறுபடை வீடுகள் எனக்குரியது என்பார்கள். பழநி, திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், ஸ்வாமி மலை, பழமுதிர் சோலை, திருத்தணி என்பதே ஆறுபடை வீடுகள்.

பழநியில் என்னை ஆண்டிக் கோலத்தில் பார்க்கலாம். நான் ஏன் இக்கோலம் பூண்டேன் என்பதை அண்ணா சொல்லியிருப்பானே? சுவாமி மலையில் அப்பாவுக்கு பிரணவத்தை உபதேசித்ததால் என்னை தகப்பன் ஸ்வாமி என்றழைப்பார்கள். சூரன் என்ற அசுரனை சம்ஹரித்த இடமே திருச்செந்தூர். திருப்பரங்குன்றத்தில் தெய்வயானையையும் திருத்தணியில் வள்ளியையும் கலியாணம் செய்துக்கொண்டேன். பழமுதிர் சோலைக்குப் போய் 'அப்பாடா' என்று சிரமம் தீர்த்துக்கொண்டேன்.

என்மேல் உண்மையான பக்தியுள்ளவன் இப்படைவீடுகள் எல்லாம் போய்க் கொண்டிருப்பானேன்? உள்ளன்போடு 'முருகா' என்று சொன்னால் போதுமே. கூப்பிட்டக் குரலுக்கு வந்து உதவக் காத்துக் கொண்டிருக்கிறேனே.

படிக்காசுப்புலவர் என்று ஒரு பக்தர் இருந்தார். அவருக்கு அன்னமும், மயிலும் போல இரு பெண்களைக் கட்டிக்கொண்டபின்பு நீ இன்னும் பச்சைக் குழந்தையா? என்று கேட்டே விட்டார்.

குழந்தை என்றதும் ஞாபகம் வருகிறது. தெய்வங்களிலேயே என்னையும் கிருஷ்ணனையும்தான் குழந்தையாக பக்தர்கள் வழிபடுகிறார்கள். ஏனோ தெரியவில்லை.

என் கையில் இருப்பது வேல். எல்லோரும் நினைப்பது போல அது கொலை செய்யும் ஆயுதம் அல்ல. ஞானத்தின் சின்னம் அது. அறிவானது வேலின் கூர்மைபோல கூர்மையாகவும், வேலின் நடு இடம் போல அகன்று விசாலமானதாகவும் கைப்பிடி நீண்டிருப்பது போல ஆழ்ந்தும் பிரகாசிக்க வேண்டும்.

அம்மா எனக்கு வேல் கொடுத்தநாகச் சில புராணங்களிலும் சில ஸ்தல வரலாறுகளிலும் எழுதி வைத்திருக்கிறார்கள். அது உண்மையான வேல் அல்ல. அம்பிகையின் மந்திரமான சக்தி ஆயுதமே அம்மா கொடுத்தது.

நான் இரண்டு பெண்டாட்டிக்காரன்தான். இவர்களால் எனக்கு தொந்திரவு எதுவும் இல்லை. இவர்கள் இருவரும் இச்சை, கிரியை

சக்திகள். இவர்கள் இருவரும் ஒத்துழைத்தால் ஞானசக்தி கிடைக்கும்.

ஒருத்தி தேவலோகத்துப் பெண். அவளே தேவசேனு. மற்ருெருவள் மான் வயிற்றில் பிறந்து, குறவர்களால் வளர்க்கப்பட்ட பூலோகப்பெண். அவளே வள்ளி நான் சூரபத்மனை ஒழித்ததற்கு நன்றியாக இந்திரன் தன் மகளை எனக்குத் திருமணம் செய்வித்தார். வள்ளியை நானே வலுவில் சென்று அவள் அன்பை பெற்று திருமணம் செய்துக் கொண்டேன். இதன் தத்துவம் என்ன தெரியுமா? பக்தர்களாக என்னை நாடி வந்து அருள் பெறுவது தேவசேனு திருமணம். இது குரங்குப்பிடி போன்றது. நானே போய் பக்தர்களுக்கு அருள்வது வள்ளித் திருமணம். தாய்ப்பூனை தன் குட்டிகளை வாயால் கௌவி, பத்திரமான இடத்தில் சேர்ப்பிப்பது போல. இவள் தமிழ் நாட்டைச் சேர்ந்தவள். அதனுல் தமிழர்கள் என்னை மாப்பிள்ளை சாமி என்றே அழைக்கிருர்கள். பூலோக இன்பத்தைப் பெறுவது இம்மை. தேவலோக இன்பத்தைப் பெறுவது மறுமை. இவ்விரண்டிலும் சரிசமமான ஆர்வம் உங்களுக்கு இருக்க வேண்டுமே என்றே இவர்களிருவரையும் பக்கத்திற்கு ஒருவளாக சரிசமமாக வைத்திருக்கிறேன்.

என் வாகனம் மயில். உலகப் பறவைகள் எல்லாவற்றிலுமே மிக அழகானது அது. அதனுல் இது இந்த நாட்டின் தேசியப் பறவையாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது. அதை ஓம்கார ஸ்வரூபம் என்பார்கள். மயில் தோகையை விரித்தாடும்போது பார்த்தால் ‘ஓம்’ என்கிற எழுத்தைப்போலவே தோற்றமளிக்கும்.

எனது கொடியில் சேவல் உள்ளது. சேவல் தினமும் காலையில் எல்லோருக்கும் முன் எழுந்து ‘கொக்கரக்கோ’ என்று கூவும். அது மாதிரியே இந்த உலக சிருஷ்டிக்கும் முதன் முதலில் எழுந்தது ஒலியே. அதை உணர்த்தவே கோழியைக் கொடியில் அமைத்து உயர்த்திருக்கிறேன்.

எனக்கு எவ்வளவோ பெயர்களைக் கொடுத்திருக்கிருர்கள். முருகன் என்ருல் அழகு என்றே பொருள். தமிழ் மொழியை அகத்தியருக்கு கற்பித்தது நானே. தமிழ்த் தெய்வம் என்பதால் ஙஞணநமண விலுள்ள ‘ம’வைச் சேர்ந்த மு, யரலவழள விலுள்ள ‘ர’வைச் சேர்ந்த ‘ரு’ கசடதபறவிலுள்ள ‘க’வைச் சேர்ந்த ‘க’ வையும் பொருக்கிச் சேர்த்து, முருகன் என்ற பெயரைத் தமிழர்கள் அளித்திருக்கிருர்கள். எனக்கு இரண்டு பெண்டாட்டிகள் இருந்தும் வடநாட்டிலுள்ளவர்கள் என்னை பிரும்மச்சாரியாகவே வழிபடுகிருர்கள்.

ஷஷ்டியில் என்னை வழிபடுவது மிக விசேஷம். 'சட்டியில் இருந்தால் அகப்பையில் வரும்' என்ற பழமொழியைக் கேள்விப் பட்டிருப்பீர்களே. இதன் பொருள் என்ன தெரியுமா? சஷ்டியில் விரதம் இருந்து என்னை வழிபட்டால் அகமாகிய வயிற்றிலுள்ள கருப்பையில் மகப்பேறு வாய்க்கும் என்பதே.

'குக்குடத்தை பிடித்தவன் சட்டியை நோக்க குறைவில்லையே' என்று ஒரு புலவர் பாடியிருக்கிருர். கோழிக்கொடி பிடித்த என் சஷ்டி விரதத்தை அனுஷ்டிக்க குறைவில்லை என்று இதன் அர்த்தம். மிகப் பழங்காலம் தொட்டே என்னை வழிபட்டு வந்திருக்கின்றனர். பதஞ்சலி காலத்திலேயே இந்த வழிபாடு இருந்ததை கல்வெட்டு சாஸனங்கள் மூலம் டாக்டர் பந்தர்கார் நிரூபித்துள்ளார். காளி தாஸர் தன் குமாரசம்பவம் என்ற காவியத்தில் என் பிறப்பை வருணித்துள்ளார். "ஹாரப்பாவின் தெய்வங்கள்" என்ற தன் கட்டுரையில் டி.ஜி. ஆராவமுத அய்யங்கார் அக்காலத்திலேயே என்னை வழிபடும் வழக்கம் இருந்ததென்று கூறியிருக்கிருர்.

என்னை வழிபடுவதில், காவடி எடுப்பது என்பது எனக்கு மிகவும் பிரியம். இந்தக் காவடிகளில் எவ்வளவோ விதம் உண்டு. ஏன் எனக்குக் காவடி பிடிக்கும் என்பதெல்லாம் பெரிய கதை. அதை எல்லாம் பின்னர் நீங்களே தெரிந்துக் கொள்வீர்கள்.

உங்களுக்குக் கஷ்டங்கள் வந்தால் முருகா! என்று அழை யுங்கள். உதவக் காத்திருக்கிறேன். அஞ்சு முகம் அதாவது முகம் பீதியடையும்படியான நிலைமை தோன்றினுல் ஆறுமுகம் அங்கு தோன்றும் என்று என் பக்தர்களே பாடியிருக்கிருர்களே.

ஆறு முகங்கள் பற்றி சொல்லவில்லையே. நான்கு பக்கம் நான்கு முகங்கள், மேலே பார்த்து ஒரு முகம், கீழே பார்த்து ஒரு முகம். இதற்கு என்ன அர்த்தம் என்ருல் எல்லா திக்கு களிலும் நான் வியாபித்திருக்கிறேன் என்பதே. என் அப்பா வுக்கு ஐந்து முகம், அம்மாவுக்கு ஒரு முகம் இரண்டையும் சேர்த்து ஆறு. என் ஆறு முகத்தை நினைத்தாலே என் அப்பா அம்மாவைச் சேர்த்து நினைத்துக்கொள்வது போல்தான். என் மந்திரத்திலுள்ள அக்ஷரங்கள் ஆறு. என் சக்கரத்தில் ஆறு கோணங்கள். இம்மாதிரி எல்லாம் ஆறு. கஷ்டம் வருகிறபோது இந்த ஆறை நினைத்துக் கொள்ளுங்கள். நான் இருக்க பயமேன்?



# பரமசிவன் பேசுகிறார்

# 8

நான் இருப்பதோ சுடுகாடு [மயானம்]. உடலில் பூசிக்கொள்வது சாம்பல். என் முதல் மனைவி தகப்பனுருக்கு [தக்ஷன்] என்னைப் பிடிக்கவில்லை. அவர் செய்த யாகத்திற்கு எனக்கு அழைப்பு அனுப்பவில்லை. எனக்கு அளவற்ற கோபம். ஆனுல் பெண்களுக்கு பிறந்த இடத்தில் மிகவும் அபிமானம் உண்டல்லவா? தான் யாகத்திற்கு போய் வருவதாக என் மனைவி தாக்ஷாயணி என்னிடம் கெஞ்சினுள். 'சரி, போ' என்றேன். அவளுக்கு அங்கு ஏற்பட்ட அவமானத்தில் தன்னை மாய்த்துக் கொண்டாள். கடுந்தவம் புரிந்து பர்வதராஜகுமாரியாக மறுபடி பிறந்து எனக்குப் பிரியமாகப் பணிவிடை செய்து வந்தாள். அச்சமயத்தில் மன்மதன் என்மேல் அம்பு எய்து, அவள்மேல் எனக்கு காதல் ஏற்படச் செய்ய முயன்ருன். எனக்கு அப்போது வந்த கோபத்தில் அவனை எரித்துவிட்டேன். பின் அவளை மணம் புரிந்துகொண்டேன். அப்படியும் என் தலை மீதுள்ள கங்கையைக் கண்டு அவளுக்கு அசூயை ஏற்பட்டது. ஆகவே, என் உடலில் பாதியை அவளுக்குக் கொடுத்தேன்.

என் பக்தர்களால் எனக்கு ஏற்பட்ட துன்பம் சொல்லிமுடியாது. ஒருவன் என்னைக் கல்லால் அடித்தான் [இவரே சாக்கிய நாயனுர்]. மற்ருெவன் பலர் முன்னிலையில் என்னை 'பித்தா' என்ருன் [இவர் சுந்தரமூர்த்தி நாயனுர்]. எங்கோயோ மண் சுமந்தபோது பிரம்படி பட்டேன் [மாணிக்கவாசகருக்காக] ஒருவன் காண்டீபத்தால் அடித்தான் [இவன் அர்ஜுனன்]. இவ்வளவும் நாலுபேருக்குத் தெரியாமல் இருக்கலாம் என்ருல், கோபாலகிருஷ்ண பாரதி என்பவர் முகாரி ராகத்தில் இதைப் பாடி பிரபலமாக்கிவிட்டார்.

### பல்லவி

தந்தைதாய் இருந்தால்
உலகத்தில் உமக்கிந்தத்
தாழ்வெல்லாம் வருமோ ஐயா !

### அனுபல்லவி

அந்தமில் நடஞ்செய்யும்
அம்பல வாணரே
அருமையாகவே பெற்று
ஒருமையுடன் வளர்த்த [தந்தைதாய்]

### சரணம்

கல்லால் ஒருவன் கடிந்
தடிக்க உடல்பதைக்கக்
காலின் செருப்பால்
ஒரு வேடன் எதிர்த்துதைக்க
வில்லால் ஒருவன் வந்தடிக்க
உமதுதிருமேனி என்னமாய்
நொந்ததோ ஐயா ஒரு [தந்தைதாய்]

கூசாமலிடையன் கைக்
கோடாரியால் வெட்டக்
கூட்டத்தில் ஒருவன் பித்தா
பேயா எனத்திட்ட
வீசி மதுரை மாறன்
பிரம்பாலடிக்க அந்த
வேளை யாரை நினைத்தீரோ
ஐயா ஒரு [தந்தைதாய்]

சீலமில்லாதொரு பெண்
காரியுமிழலாச்சே
சேர்ந்தவளும் தலை மீதேற
எளிதாய்ப் போச்சே
பாலகிருஷ்ணன் இதைப்
பார்க்கும்படி யாச்சே
பாருலகிலெங்கணும்
பார்க்கில் இதுவே பேச்சே [தந்தைதாய்]

''இதெல்லாம் பொறுக்காமல் நான் தில்லையில் ஆடிக்கொண்டே காலத்தைக் கழிக்கிறேன்.

என் மூத்த பிள்ளை பற்றிதான் தெரியுமே. அவன் எல்லாவற்றையும் சாப்பிட்டு விடுவான். மற்றொரு பிள்ளை வேல் வைத்துக் கொண்டு விளையாடுபவன், என் குடும்பத்தைக் கவனித்துக்கொள்ள வேலைக்கு வா என்றால், சுந்தரன், உன் வீட்டில் வேலை செய்ய என்னால் முடியாது; இந்த இரண்டு பசங்களையும் கட்டி மேய்க்க நம்மாலாகாது என்கிறான். என் மனைவி கங்கை என்ன கேட்டாலும் வாய் திறந்து பேசுவதில்லையாம். மற்றொருத்தி உமை வேலை வாங்கிக் கொள்கிறாளே யொழிய அதற்குத் தகுந்த கூலி கொடுப்பதில்லையாம். இப்படிக் குடும்பம் இருந்தால் யார்தான் வேலைக்கு வருவார்கள்.

என்னை ஸ்தாணு என்பார்கள். கட்டை மரம் என்று அர்த்தம். உயிரோட்டம் உள்ள மரம்தான். ஆனாலும் உணர்வில்லாமல் இருக்கிறது. இந்தக் கட்டையை சுற்றிக்கொண்டிருக்கும் கொடி அம்பிகை. அந்தக் கொடிக்கு 'அபர்ணா' என்று ஒரு பெயர். அதாவது இலை இல்லாதது என்று அர்த்தம். உயிரோட்டத்துடன் ஆனால் உணர்ச்சிக் கொந்தளிப்புகள் இல்லாத பராசக்தி என்ற கொடி உயிரோட்டம் இருந்தாலும் உணர்ச்சியில்லாத பரம்பொருளான என்னைச் சுற்றிக் கொண்டிருக்கிறாள்.

என்னைச் சம்ஹாரமூர்த்தி என்கிறார்கள். கெட்ட எண்ணங்களையும் கெடுதலான அம்சங்களையுமே நான் பொசுக்கி வருகிறேன். இமய மலையில் நிம்மதியாகத் தவமிருந்த என்னை மணந்து கலியாணசுந்தரனாக்கி, தமிழ்நாட்டை ஆளும் பாக்கியத்தைக் கொடுத்தாள் மீனாக்ஷி.

எனக்கும் என் மைத்துனன் விஷ்ணுவுக்குமிடையே எவ்வித விரோதமும் கிடையாது. அப்படியிருக்க சிலர் எங்களைப் பார்த்துத் துவேஷம் காட்டுகின்றனர்.

நான் ஏழை பங்காளன். என்னை திருப்தி செய்வது சுலபம். மகான் அப்பய்ய தீக்ஷிதர்,

அர்க்கத்ரோண ப்ரப்ருதி
குஸுமை: அர்ச்சனம் தேவிதேயம்

என்கிறார். அர்க்கம் என்றால் எருக்கம்பூ. துரோணம் என்றால் தும்பைப்பூ. இந்த இரண்டு பூக்களும் தாராளமாகக் கிடைக்கக் கூடியது. இதைப் பறித்தால் ஏன் பறிக்கிறீர்கள் என்று யாரும் கேட்கமாட்டார்கள். இவ்விரண்டுப் பூக்களை என்மீது பக்தியுடன் போட்டாலே நான் ஆனந்தமடைவேன். என் பெயர் இரண்டே

எழுத்துக்கள் [சிவ]. சொல்வது சிரமம் இல்லை. இன்ன காலத்தில் தான் சொல்லவேண்டும் என்பதில்லை.

ஒரு பக்தன் மலைமீது நான் தனியாக இருக்கிறேனே என்று எனக்குத் துணையாக இருந்தான். தான் உண்ணும் ஆகாரமான மாமிசத்தை எனக்கு நிவேதனம் செய்தான். வாயிலுள்ள உமிழ் நீரால் அபிஷேகம் செய்தான். அவன் பக்தியுடன் செய்த இவ்வள வையும் அன்புடன் ஏற்றுக்கொண்டேன். அவன் யார் என்று தெரிய வில்லையா? அவன்தான் கண்ணப்பன்.

என்னை சிக்கெனப் பிடிக்கவேண்டும். இதை மாணிக்கவாசகர் விளக்கி இருக்கிறார்.

பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உவப்பிலா ஆனந்தமாயத்
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே! சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

வைத்தீஸ்வரன் கோவிலில், என்னை எல்லா வியாதிகளையும் குணப்படுத்தும் மருத்துவனாக, வைத்தீஸ்வரன் எனப் பெயரிட்டு வழிபட்டு வருகின்றனர். "இருள் சேர் இரு வினையும் தீர்க்கும்" வல்லமை எனக்குண்டு என்று திருநாவுக்கரசர் போற்றுகிறார். இவன் உறவினர்களுக்கு வந்த வியாதியையே குணப்படுத்த முடிய வில்லையே! இவன் என்ன வைத்தியன்? என்று ஒரு புலவர் பாடி யிருக்கிறார்.

வாதாக்காலம் தனக்கு மைத்துனருக்கு நீரிழிவாம்
போதப் பெருவயிரும் புத்திரனுக்கு—மாதரையில்
வந்தவகை தீர்க்க வகையறியான் வேளூரான்
எந்தவினை தீர்த்தான் இவன்.

இந்தப் பாட்டையும் நான் வஞ்சப் புகழ்ச்சியாகவே ஏற்றுக் கொண்டேன்.

வன்தொண்டன் சுந்தரமூர்த்தி இருக்கிறானே, அவன் ஒருநாள் என் சந்நிதிக்கு வந்து, தனக்கு வேண்டிய பொருளுக்கு ஒரு பட்டி யலே போட்டு விட்டான்.

கறிவிரவு நெய்சோறு
முப்போதும் வேண்டும்
கஸ்தூரி கமழ் சாந்தும்
பணித்தருள வேண்டும்
பொற்பூவும் பட்டிகையும்
புரிந்தருள வேண்டும்

என்று அடுக்கிக்கொண்டே போனுன். நான் வாய் திறந்து எதுவும் பேசவில்லை. குறிப்பாகவும் எதையும் உணர்த்தவில்லை. அத் தொண்டருக்கு கோபம் வந்துவிட்டது. இப்படி சும்மா இருப்பது தருமா? முறையா? என்று கேட்டார். அதற்கும் நான் பதில் சொல்லவில்லை. மயிலே, மயிலே, இறகு போடு! என்ருல் போடாது என்பதை உணர்ந்த அத்தொண்டர்,

''மண்ணுலகும் விண்ணுலகும் உம்மதே ஆட்சி...
திண்ணென என் உடல் விருத்தி தாரேராகில்
திருமேனி வருந்தவே வளைக்கின்றேன் நானை
கண்ணறையம் கொடும்பாடன் என்றுரைக்க வேண்டா

என்று சவால் விடுத்தார். ''என் போன்ற அடியார்களுக்கு கொடுப்பதற்கு அளவற்ற செல்வம் உன்னிடம் உண்டு. இன்னும் ஒரு நாளைக்குள் நான் கேட்டவற்றைக் கொடுக்காவிட்டால், உமது திருமேனி வருந்த வளைத்திடுவேன். அப்போது கடியவன், கொடிய வன் என்று என்னை தூஷிப்பதில் பலனில்லை'' இப்படி மிரட்டு கிருன். என்ன செய்வது? நான் சாதா பிச்சைதான் எடுப்பவன். இவன் எடுப்பது அதிகார பிச்சை.

இந்த சுந்தரனுக்கு இரண்டு கண்களும் போய்விட்டன. என்னை உருக்கமுடன் பாடியதால், பல பாட்டுகள் பாடியபின், ஒரு கண்ணைக் கொடுத்தேன். ''மற்றைக்கண் தாராதொழிந்தால் வாழ்ந்து போதீரே'' என்று கோபித்து சபிக்கிருன்.

என்மீது பூரண நம்பிக்கை இருந்தால் தைரியமாக நீங்கள் எந்தக் காரியத்தையும் செய்யலாம். ஞானசம்பந்தனைப் பாருங்கள்.

''ஆலவாய் அரன் அருள் என்பால் சுரக்கும்வரை நான் சிறிதும் அச்சமின்றி பகைவரை எதிர்த்துப் போராடுவேன்; வெற்றியும் காண்பேன்'' என்று மங்கையர்க்கரசியிடம் கூறுகிருர்.

மானினேர் விழிமாதராய் வழுதிதகு
மாபெரும் தேவிகேள்
பானல்வாய் ஒருபாலன் ஈங்கிவன்
என்றுநீ பரிவெய் திடேல்

ஆனைமாமலை யாதியாய இடங்களில்
பல அல்லல்சேர்
ஈனர்கட் கெளியேன் அல்லேன்
திரு ஆலவாய்அரன் நிற்கவே.

நாவுக்கரசர் ''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்'' என்கிறார். இந்த துணிச்சல் அவருக்கு எப்படி வந்தது? என் மீதுள்ள அசைக்க முடியாத நம்பிக்கையால்தான்.

உமாபதி சிவம் என்ற பக்தர், என்னை மூட்டைத் தூக்கும் ''போர்ட்ட''ராக்கியிருக்கிறார். அவருடைய 'திருவருட்பயன்' என்ற நூலில்,

''கிடைக்கத் தகுமே நற்
கேண்மையர்க் கல்லால்
எடுத்துச் சுமப்பானை இன்று.''

யார் என்னிடம் அடைக்கலம் புகுந்து, பற்றற்று, என்னைப் பற்றுக் கோடாகப் பற்றி நிற்கிறார்களோ, அவர்களுடைய துன்பச் சுமைகளை எல்லாம் நான் ஏற்றுக்கொண்டு அவரைக் காப்பாற்றுகிறேன். இதையே திருநாவுக்கரசர், ''தமக்கு அன்புபட்டவர் பாரமும் பூண்பர்'' என்கிறார்.

---

# பராசக்தி பேசுகிருள்



**9**

உங்களுக்கு ஒரு அம்மா இருக்கிருள் இல்லையா? அதுபோல இந்த உலகத்திற்கெல்லாம் ஒரு அம்மா இருக்கவேண்டும் அல்லவா? அந்த அம்மாதான் நான்.

தாய்ப் பாசம் என்பது தனிப் பெருமை கொண்டது. பெற்று வளர்த்த மகன், தாய் சொல்லைக் கேளாமல், தவருக நடந்துக்கொண்டாலும், அவைகளைத் தாயார் பொருட்படுத்தமாட்டாள். தாயை வெறுத்த மகனுக்கு தனக்குக் கஷ்டம் வரும்போது தன்னையும் அறியாமல் 'அம்மா' என்ற சொல் அவன் வாயினின்றும் வருகிறது. பிரும்மா முதல் மிக நுண்ணிய புழு வரை உள்ள உயிர்கள் அனைத்தையும் பெற்றவள் நான். "ஆப்ரம்ம கீட ஜனனி" என்று என்னை அழைக்கிருர்கள்.

நிலம், நதி, மலை, பசு, நாடு இவைகளை நீங்கள் பெற்ற தாயாகவே கருத வேண்டும். பெற்ற தாயிடம் பாசம் வைத்தாலே என்னருள் நிச்சயம் கிடைக்கும்.

அன்னை வழிபாடு என்பது இப் பாரத புண்ணிய பூமியில் மட்டுமின்றி, உலகிலுள்ள எல்லா நாடுகளிலுமே ஆதிகாலத்திலிருந்து இருந்து வருகின்றது.

உலகம் முழுவதுமே நான் பரவியிருக்கிறேன். என் உடற் பகுதிகள் விழுந்த 51 இடங்கள் சக்தி பீடங்களாக விளங்குகின்றன. தமிழ்நாட்டில் முக்கியமாக விளங்குவது காஞ்சி [காமகோடி பீடம்] மதுரை [மந்திரிணி பீடம்], திருவானைக்காவல் [தண்டினி பீடம்], குற்ருலம் [பராசக்தி பீடம்], திருவாரூர் [கமல பீடம்].

என்னைக் குறிக்கும் எண் ஒன்பது. இந்த எண்ணைப்பற்றி ஒரு சிறப்புக் குணம் தெரியுமா? ஒன்பதைக் கொண்டு எந்த எண்ணைப் பெருக்கினுலும் கிடைக்கும் எண்ணின் கூட்டுத்தொகை ஒன்பது.

உதாரணமாக $9 \times 3 = 27$ $(2+7=9)$ இந்த ஒன்பதின் ரூப மாகவே நான் இருக்கிறேன். அதனுல்தான் ஒன்பது இரவுகள் என்னை வழிபட்டு, நவராத்திரி விழா கொண்டாடுகிருர்கள்.

இந்த நவராத்திரி ஒன்பது நாளும், நான் இறைவனை [என் கண வரை]க் குறித்துத் தவம் இருக்கிறேன். அவரும் நானும் ஒன்றுபட் டால்தான் [அதாவது சக்தியும் சிவமும் இணைந்தால்தான்] இந்த உலகமே இயங்கும். "சக்தியும் சிவனும் வேறுபட்டால் சகந்தனில் அசைவே இல்லை" என்று சிவவாக்கியர் என்ற ஞானி பாடியிருக் கிருரே.

உலக நன்மைக்காக என் சக்தி செயல்பட வேண்டியிருக் கிறது. அதற்காகவே நீலத்திரை கடல் ஓரத்தில் கன்னியாகுமரி யாக தினமுமே தவம்செய்துக் கொண்டிருக்கிறேன். ஏன் இந்தத் தவம் என்று கேட்பீர்கள் அல்லவா? என்னதான் என் பிரபாவம் இருந்த போதிலும், என் கணவருடன் சேர்ந்து செயல்பட்டால்தான் எனக்கு மதிப்பு. இவ்வுலக காரியங்கள் எல்லாம் எங்கள் இருவரின் ஐக்கியத்தினுலேயே நடைபெறுகிறது. உதாரணத்திற்கு ஸ்விட்ச் போட்டால் மின்சார பல்ப் எரிகிறது. அது எப்படி எரிகிறது? சக்தி யாகிய ஒரு பாகமும், சிவமாகிய மற்றொரு பாகமும், இணையவே ஒளி ஏற்படுகிறது. இந்த இரண்டும் இணையாவிட்டால் நீங்கள் என்ன தான் ஸ்விட்ச் போட்டாலும் பல்ப் எரியாது.

சிவம் ஆடாது, அசையாது, இயங்காது. சலனமற்றிருப்பது சிவம். சக்தியாகிய நான் அசைவேன், ஆடுவேன். சிவத்தை இயக்குவதும் நானே. நான் கூடாவிட்டால் சிவம் இயங்காது இப் பிரபஞ்சம் தோன்ருது 'சக்தி இருந்தால் செய்; இல்லையேல் சிவனே என்று சும்மா இரு' என்பதைக் கேட்டிருக்கலாமே.

ஆதி பராசக்தி நானே. நானே காஞ்சியில் காமாக்ஷியாகவும் மதுரையில் மீனுக்ஷியாகவும், காசியில் விசாலாக்ஷியாகவும், திருக் கடவூரில் அபிராமியாகவும், திருவானைக்காவலில் அகிலாண்டேஸ் வரியாகவும், திருவேற்காட்டில் கருமாரியாகவும், திருவையாறு தர்ம ஸம்வர்த்தினியாகவும், கொல்லூர் மூகாம்பிகையாகவும் விளங்கு கிறேன். அசுரர்களைத் தொலைக்க லலிதாவாகவும், காளியாகவும், துர்க்கையாகவும், உருவெடுத்து நல்லவர்களைக் காத்திருக்கிறேன்.

பிரஹ்லாதன், கடவுள் தூணிலும் இருப்பார் துரும்பிலும் இருப் பார் என்று சொன்னுன். ஏன் அப்படிச் சொன்னுன்?

அண்டங்கள் கோடிக்கணக்கான நுண் அணுக்களால் ஆனவை. இந்த நுண் அணுக்கள் இத்தகையன என்று நினைக்கவோ, கூறவோ, தொட்டுக் காட்டவோ முடியாது அத்தகைய நுண்ணியப் பொருள்களும் தானே இயங்காது. அவைகளை ஒரு சக்தி இயங்க வைக்க வேண்டும். அந்த சக்தி நானே.

எந்த ஒரு செயலும் சிந்தனையும் கூட மனித முயற்சியால் மட்டும் நடைபெறுவது இல்லை. ஒரு சக்தி செயல்படுவதையே 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்கிறார்கள். எந்த நேரத்திலும், எந்தக் காரியத்தைச் செய்யும்போதும், முதலில் நினைவு கொள்ளவேண்டியது என்னையே. முழுமையான பலம் அப்போது உங்களுக்கு ஏற்பட்டுவிடும்.

என்னைப்பற்றி பாரதியார் "ஓம் சக்தி, ஓம் சக்தி" என்று பாடியிருக்கிறார். அபிராமிபட்டர் என்னைப்பற்றி ஒரு அந்தாதியே 00 பாடல்களில் பாடியிருக்கிறார். குமரகுருபரர் இயற்றிய மீனாக்ஷி பிள்ளைத்தமிழ், ஆதிசங்கரர் இயற்றிய சௌந்தர்யலகரி, எல்லாம் என் புகழையே பாடுகின்றன.

நானும் உங்களைப்போல இரண்டு கைகள் உள்ளவளாகவே பாண்டியநாட்டுக் கோவில்களிலெல்லாம் இருக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியுமா? ஏனெனில், அங்கெல்லாம் பாண்டிய நாட்டு மன்னர்களின் குமாரிகளாக நான் விளங்குகிறேன்.

நான் மந்திரரூபி, யந்திரரூபி, தந்திரரூபி என்ற எல்லா உருவங்களிலும் விளங்குகிறேன். என்னை ஸ்ரீ சக்ர வடிவமாகவும், மேருவாகவும் வழிபடுகிறார்கள். ஸ்ரீ சக்ர யந்திரத்தை காஞ்சி காமாக்ஷி முன்பும், சென்னை காளிகாம்பா முன்பும், திருவானைக்கா அகிலாண்டேஸ்வரி தாடங்கங்களிலும் காணலாம். மேருவை மாங்காடு காமாக்ஷி அம்மன் ஆலயத்திலும், கொல்லூர் மூகாம்பிகை சந்நிதியிலும், திருவிடமருதூர் மோகாம்பிகா சந்நிதியிலும் காணலாம்.

இந்த ஸ்ரீ சக்கரம் என்பது வேறு எங்கேயோ இருப்பதில்லை. நம் உடம்பில் இருப்பதுதான். இந்த சக்கரத்திலுள்ள 43 கோணங்களில் என் பரிவார தேவதைகள் இருக்கின்றனர். பிந்து என்கிற மைய ஸ்தானத்தில், நான் என் கணவருடன் இருக்கிறேன். என் பரிவார தேவதைகள் எல்லாரையும் வழிபட்ட பின் என்னை பூஜிப்பதையே நான் ஆனந்தமாகக் கருதுகிறேன். இந்த ஸ்ரீ சக்கரம் வீட்டில் இருப்பதே ரக்ஷை.

கேரளாவில் என்னை பகவதியாக வழிபடுகிறார்கள். கல்கத்தாவில் காளியாக கொண்டாடுகிறார்கள்.

எனக்கு யோக வடிவம், போக வடிவம், வேக வடிவம் உண்டு. அன்பர்களுக்கு எல்லா வடிவங்களுமே ஆராதனைக்குரியதுதான்.

என்னை வழிபட சிறந்த மார்க்கம் ஸ்ரீ வித்யா உபாசனை. இது முன் ஜன்மத்தில் செய்த புண்ணியமும் என் அருளும் பெற்றவர்களுக்கே கிட்டும். என் அருள் இல்லாதவார்க்கு கிட்டவே கிட்டாது.

இந்த ஸ்ரீ வித்யை உபாசனை தக்க ஆசார்யரிடமிருந்தே பெற வேண்டும். நல்வழியில் வழிகாட்டிக் கொண்டு செல்பவர் ஆசார்யரே. ஸ்ரீ வித்யா குரு பரம்பரை என்றே தனியாக உண்டு. ஆதியில் என் நாதர் தக்ஷிணாமூர்த்தியும், ஹயக்ரீவரும், தத்தாத்ரேயரும் குருவாக இருந்து இந்த வித்யையை தம் சிஷ்யர்கள் மூலமாக பரப்பினார்கள்.

பொதுவாக ஸ்ரீ வித்யா மந்திரங்களின் ரிஷி தக்ஷிணாமூர்த்தி தான்., இந்த ஸ்ரீ வித்யா பூஜா முறையை வகுத்து, வழிவகுத்தவர் தத்தாத்ரேயர். இவர் சிஷ்யர் பரசுராமர், தத்தாத்ரேயர் அருளிய பூஜா முறையைச் சுருக்கி பரசுராம கல்ப சூத்திரம் என்ற நூலை வெளியிட்டார். அதையும் சுருக்கியவர் சுமேதஸ் என்ற அவர் சிஷ்யர்.

ஸ்ரீ புரம் பற்றிய வரலாறு வர்ணனை என்னைப் பற்றிய (லலிதா) ஸகஸ்ரநாமம், திரிசதி முதலியவைகளை ஹயக்ரீவர் அகஸ்தியருக்கு உபதேசித்து பிரபலப்படுத்தினர்.

என் மந்திரமான பஞ்சதசி, ஷோடசி உபதேசிக்கப்பட்டவர்கள் வேறு எந்த மந்திர உபதேசமும் பெற வேண்டியதில்லை. ஸ்ரீ சக்ரத்தைப் பூஜிப்பவர்கள் வேறு எந்த சக்ரத்தையும் பூஜிக்க வேண்டியதில்லை. என் ஸகஸ்ரநாமத்தைப் பாராயணம் செய்பவர்கள் வேறு எதையுமே பாராயணம் செய்ய வேண்டியதில்லை. இந்த மூன்றிலுமே வேறு எந்த தெய்வத்தையும் வழிபடலாம்.

பாஸ்கரராயரும், லக்ஷ்மீதரரும் ஸ்ரீ வித்யையை பரப்பியதில் முக்கிய பங்கு பெற்றவர்கள்.

குழந்தைகளாகிய நீங்கள் எல்லோரும், உங்கள் அம்மாவிடம் அன்பாகவும், பயபக்தியுடனும் நடந்து, அவர்கள் சொற்படி கேட்டால் அதுவே என்னை வழிபடுவதாகும். ஏன் இப்படிச் சொல்கிறேன் தெரியுமா?

உபாத்யாயன் தசா சார்யா
ஆசார்யாணும் சதம் பிதா
ஸகஸ்ரந்து பித்ரன் மாதா
கௌரவேணத் ருச்யதே ||

என்கிறது மனுதர்ம சாஸ்திரம்.

இதன் அர்த்தம் என்ன தெரியுமா ?

உபாத்யாயரைவிட பத்து மடங்கு அதிகம் ஆசாரியன்.

ஆசாரியனைவிட 100 மடங்கு பிதா அதிகம்.

தகப்பனைவிட 1000 மடங்கு அதிகம். மதிப்புக்கும் பெருமைக்கும் உரிய அன்னை. —அதாவது உங்கள் அம்மா.

நான் இருக்க பயமேன் ?

---

## 'அம்பிகை' பற்றிய பிரதிபா நூல்கள்

ஜகன் மாதா லலிதா
தேவி புவனேஸ்வரி
தேவி காயத்ரீ
லக்ஷ்மி கடாக்ஷம்
வரலக்ஷ்மி தாயே வருக வருகவே !
அன்னை பராசக்தி
கண்கண்ட தெய்வம் கருமாரி
கருணை காமாக்ஷி
காளி மாதா ஹ்ருதயம்

# ஸ்துதிமாலா 10



குழந்தைகளே !

இதுவரை நீங்கள், ஒவ்வொரு தெய்வங்கள் பேசியதையும், சந்தோஷத்துடன் கேட்டுக் கொண்டு இருந்தீர்கள். அவர்களை எல்லாம் நீங்கள் மறக்காமல் இருப்பதற்கு ஒரே வழி, இசையால் அவர்களை நினைவுபடுத்திக் கொள்வதேயாகும். அதற்காகவே நமது முன்னோர்கள், குழந்தைகளாகிய உங்கள் பிஞ்சு உள்ளங் களில் பசுமரத்தாணி போன்று பதியும் வகையிலும், அதே நேரத் தில் உங்களுக்கு நற்பலன்களும், வலிமையும், நலம் பலவும் ஏற்பட வேண்டுமென்றும் பாடல்கள் வடிவிலே அருளிச் செய்துள் ளனர்.

அவைகளில் 'கவசம்'* என்பது சக்தி மிகுந்த பாடல்களாகும். அந்த வகையில் இங்கு சில கவச பாடல்களைக் கொடுத்திருக் கிறோம். அவைகளை நீங்கள் காலையிலும், மாலையிலும் பாராயணம் செய்து, தெய்வ அனுக்ரஹம் பெற்று சீரோடும் சிறப்போடும் வாழ வேண்டும் என்று பிரார்த்திக்கின்றோம். அன்னை பராசக்தி நிச்சயம் உங்களுக்கு அருள்புரிவாள்.

## விநாயக கவசம்

ஆதியில் இக் கவசத்தைக் காசிபமுனிவர் முற்கல முனிவருக்கு அருளிச்செய்ய, அவர் மாண்டவிய முனிவருக்கு அநுக்கிரகிக்க, அவர் மரீசி முனிவருக்கு உபதேசித்தருள, அவர் பல முனிவர் களுக்கும் திருவாய் மலர்ந்தருளிச் செய்தனர்.

நித்திய கருமங்களை முடித்துப் பரிசுத்தமாகிய ஓரிடத்தில் இருந்துகொண்டு, ஒன்றுபட்ட மனதுடனே விநாயகரைத் தியா னித்து இதைச் செபிக்க வேண்டும்.

---

* இரும்பு கவசம் அணிந்தவர் உடலில் பாணம் தைக்காது, ரணம் உண்டாகாது. அதே போல் மந்திர கவசம் துன்பம் வராமல் பாதுகாக்கும்.

நூல்

வளர்சிகையைப் பராபரமாய் வயங்குவிநா யகர்காக்க
வாய்ந்த சென்னி
யளவுபடா வதிகசவுந் தரதேகம தோற்கடர்தா
மமர்ந்து காக்க
விளரறநெற் றியையென்றும் விளங்கியகா சிபர்காக்க
புருவந் தம்மைத்
தளர்வின்மகோ தரர்காக்க தடவிழிகள் பாலசந்
திரனுர் காக்க
கவின்வளரு மதரங்கச முகர்காக்க தாலங்கணக்
கிரீடர் காக்க
நவில்சிபுகங் கிரிசைசுதர் காக்கநனி வாக்கை
விநாயகர்தாங் காக்க
அவிர்நகைதுன் முகர்காக்க வள்ளெழிற்செஞ் செவிபாச
பாணி காக்க
தவிர்தலுறு திளங்கொடிபோல் வளர்மணிநா சியைச்சிந்தி
தார்த்தர் காக்க
காமருபூ முகந்தன்னைக் குணேசர்நனி காக்ககளங்
கணேசர் காக்க
வாமமுறு மிருதோளும் வயங்குகந்த பூர்வசர்தா
மகிழ்ந்து காக்க
ஏமமுறு மணிமுலைவிக் கினவினு சன்காக்க
விதயந் தன்னைக்
தோமகலுங் கணநாதர் காக்கவகட் டினைத்துலங்கே
ரம்பர் காக்க
பக்கமிரண் டையுந்தரா தரர்காக்க பிருட்டத்தைப்
பாவ நீக்கும்
விக்கினக ரனகாக்க விளங்கிலிங்கம் வியாளபூ
டணர்தாங் காக்க
தக்ககுய்யந் தன்னைவக் கிரதுண்டர் காக்கசக
னத்தை யல்லல்
உக்கண பன்காக்க வூருவைமங் களமூர்த்தி
யுவந்து காக்க
தாழ்முழந்தாண் மகாபுத்தி காக்கவிரு பதமேக
தந்தர் காக்க
வாழ்கரங்கிப் பிரப்பிரசா தனர்காக்க முன்கையை
வணங்கு வார்நோய்

ஆழ்தரச்செய் யாசாபூ ரகர்காக்க விரல்பதும
வத்தர் காக்க
கேழ்கிளரு நகங்கள்விநா யகர்காக்க கிழக்கினிற்புத்
தீசர் காக்க
அக்கினியிற் சித்தீசர் காக்கவுமா புத்திரர்தென்
ஞசை காக்க
மிக்கநிரு தியிற்கணே சுரர்காக்க விக்கினவர்த்
தனற்மேற் கென்னுந்
திக்கதனிற் காக்கவா யுவிற்கசகன் னன்காக்க
திகழு தீசி
தக்கநிதி பன்காக்க வடகிழக்கி லீசநந்
தனரே காக்க
ஏகதந்தர் பகன்முழுதுங் காக்கவிர வினுஞ்சந்தி
யிரண்டன மாட்டும்
ஓகையின்விக் கினகிருது காக்கவிராக் கதர்பூத
முறுவே தாள
மோகினிபே யிவையாதி யுயிர்த்திறத்தால் வருத்துயரு
முடிவி லாத
வேகமுறு பிணிபலவும் விலக்குபுபா சாங்குசர்தாம்
விரைந்து காக்க
மதிஞானந் தவந்தான மானமொளி புகழ்குலம்வண்
சரீர முற்றும்
பதிவான தனந்தானி யங்கிரக மனைவிமைந்தர்
பயினட் பாதிக்
கதியாவுங் கலந்துசர்வா யுதர்காக்க காமர்பவுத்
திரர் முன்னுன
விதியாருஞ் சுற்றமெலா மயூரேச ரெஞ்ஞான்றும்
விரும்பிக் காக்க
வென்றிசீ விதங்கபிலர் காக்ககரி யாதியெலாம்
விகடர் காக்க
என்றிவ்வா றிதுதனைமுக் காலமுமோ திடினும்பா
லிடையூ றொன்றும்
ஒன்றுரு முனிவரர்கா ளறிமின்கள் யாரொருவ
ரோதி னுலு
மன்றவாங் கவாதேகம் பிணியறவச் சிரதேக
மாகி மன்னும்.

# சண்முக கவசம்

அண்டமாய் அவனியாகி யறியொணாப் பொருள தாகித்
தொண்டர்கள் குருவுமாகித் துகளறு தெய்வமாகி
எண்திசை போற்ற நின்ற என்னருள் ஈசனான
திண்திறல் சரவணத் தான், தினமும்என் சிரசைக்காக்க. 1

ஆதியாங் கயிலைச் செல்வன் அணிநெற்றி தன்னைக்காக்க
தாதவிழ் கடப்பந்தாரான் தாளிருநுதலைக் காக்க
சோதியாந் தணிகையீசன் துரிசிலா விழியைக்காக்க
நாதனாம் கார்த்திகேயன் நாசியை நயந்து காக்க 2

இருசெவி களையுஞ் செவ்வேள் இயல்புடன் காக்க வாயை
முருகவேள் காக்க நாப்பல்முழுது நற்குமரன் காக்க
துரிசறு கதுப்பையானைத் துண்டனார் துணைவன் காக்க
திருவுடன் பிடரிதன்னைச் சிவசுப்பிர மணியன் காக்க. 3

ஈசனாம் வாகுலேயன் யெனது கந்தரத்தைக் காக்க
தேசுறு தோள்விலாவும் திருமகள் மருகன் காக்க
ஆசிலா மார்பை யீராறுயுதன் காக்க என்தன்
ஏசிலா முழங்கைதன்னை யெழிற்குறிஞ்சிக் கோன் காக்க. 4

உறுதியாய் முன்கைதன்னை உமையிள மதலை காக்க
தறுகணேறிடவே என்கைத் தலத்தைமா முருகன்காக்க
புறங்கையை அயிலோன் காக்க பொறிக்கரவிரல்கள் பத்தும்
பிறங்குமால் மருகன் காக்க பின்முதுகைச்சேய் காக்க. 5

ஊணிறை வயிற்றை மஞ்ஞை யூர்தியோன் காக்க வம்புத்
தோணிமிர் சுரேசன் உந்திச் சுழியினைக் காக்க குய்ய
நாணினையங்கி கௌரி நந்தனன் காக்க பீஜ
ஆணியைக் கந்தன் காக்க அறுமுகன் குதத்தைக் காக்க. 6

எஞ்சிடா திடுப்பை வேலுக் கிறைவனார் காக்க காக்க
அஞ்சகனமோ ரிரண்டும், அரன் மகன் காக்க காக்க
விஞ்சிடுபொருட்காங்கேயன் விளரடித் தொடையைக் காக்க
செஞ்சர ணேசவாசான் திமிருமுன் தொடையைக் காக்க. 7

ஏரகத்தேவன் என் தாள் இருமுழங்காலுங் காக்க
சீருடைக் கணைக்கால் தன்னைச் சீரலை வாய்த்தே காக்க
நேருடைப் பரடிரண்டு நிகழ்பரங்கிரியன் காக்க
சீரிய குதிக்கால் தன்னைத் திருச்சோலை மலையன் காக்க. 8

ஐயுறு மலையன் பாதத்து அமர் பத்து விரலுங் காக்க
பையுறு பழநிநாத பரன் அகங் காலைக் காக்க
மெய்யுடன் முழுதும் ஆதிவிமல சண்முகவன் காக்க
தெய்வநாயக விசாகன் தினமும் என்னெஞ்சைக் காக்க. 9

ஒலியெழ வுரத்த சத்தத் தொடுவரு பூதப்ரேதம்
பலிகொள் இராக்கதப்பேய் பலகணத்து எவையானாலும்
கிலிகொளவெனை வேல்காக்க கெடுபரர் செய்யும் சூன்யம்
வலியுள மந்த்ர தந்த்ர வருத்திடாது அயில்வேல் காக்க. 10

ஓங்கிய சீற்றமே கொண்டு உவணி வில் வேல் சூலங்கள்
தாங்கிய தண்டம் எஃகந் தடி பரசு ஈட்டியாதி
பாங்குடை யாயுதங்கள் பகைவர் என்மேலே யோச்சின்
தீங்குசெய்யாமல் என்னைத் திருக்கைவேல் காக்க காக்க. 11

ஔவிய முளர் ஊன் உண்போர் அசடர் பேய் அரக்கர்புல்லர்
தெவ்வர்கள் எவரானாலும் திடமுடனெனைமற் கட்டத்,
தவ்வியே வருவாராயிற் சராசரமெலாம் புரக்கும்
கவ்வுடைச் சூரசண்டன் கையயில் காக்க காக்க. 12

கடுவிடப் பாந்தள் சிங்கம் கரடி நாய் புலி மாயானை
கொடிய கோணாய் குரங்கு கோலமார்ச்சாலம் சம்பு
நடையுடை யெதனாலேனு நானிடர்ப் பட்டிடாமல்
சடிதியில் வடிவேல் காக்க சானவி முனைவேல் காக்க. 13

ஙகரமே போற்றழீஇ ஞானவேல் காக்க வன்புள்
சிகரிதேள் நண்டுக்காலி செய்யான் ஏறு ஆலப்பல்லி
நகமுடை ஓந்தி பூரான் அளிவண்டு புலியின் பூச்சி
உகமிசை யிவையால் எற்கோர் ஊறிலா தைவேல் காக்க. 14

சலத்திலுய்வன் மீனேறு தண்டுடைத் திருக்கைமற்றும்
நிலத்திலும் சலத்திலுந் தான்நெடுந்துயர் தரற்கேயுள்ள
குலத்தினால்நான் வருத்தங்கொண்டிடாது அவ்வவ்வேளை
பலத்துடனிருந்து காக்க பாவகி கூர்வேல் காக்க. 15

ஞமலியம் பரியன் கைவேல் நவக்கிரகக் கோள் காக்க
சுமவிழி நோய்கள் தந்தசூலை யாக்கிரண ரோகம்
திமிர்கழல் வாதம் சோகை சிரமடி கர்ணரோகம்,
எமையணுகாமலே பன்னிருபுயன் சயவேல் காக்க. 16

டமருகத் தடிபோனைக்குந் தலையிடி கண்டமாலை
குமுறு விப்புருதி குன்மம் குடல்வலி ஈழை காசம்
நிமிரொணு திருத்தும் வெட்டை நீர்ப்பிர மேகமெல்லாம்
எமையடையாமலே குன்றெறிந்தவன் கைவேல் காக்க. 17

இணக்கமில்லாத பித்தவெரிவு மாசுரங்கள் கை கால்
முணக்கவே குறைக்குங் குஷ்டம் மூலவெண்முளை தீ மந்தம்
சணத்திலே கொல்லும் சன்னி சாலமென் றறையுமிந்தப்
பிணிக்குலம் எனையாளாமல், பெருஞ்சத்திவடிவேல் காக்க. 18

தவனமாரோகம் வாதம் சயித்தியம் அரோசகம் மெய்
சுவறவே செய்யு மூலச்சூடிளைப்புடற்று விக்கல்
அவதிசெய் பேதி சீழ்நோய் அண்டவாதங்கள் சூலை
எவையும் என்னிடத்து எய்தாமல் எம்பிரான் திணிவேல்
காக்க, 19

நமைப்புறு கிரந்தி வீக்கம் நணுகிடு பாண்டு சோபம்
அமர்த்திடுகருமை வெண்மையாகுபஃறொழுநோய் கக்கல்
இமைக்குமுன் னுறுவலிப்போடு எழுபுடைப் பகந்தராதி
இமைப்பொழுதேனும் என்னை யெய்தாமலருள்வேல் காக்க. 20

பல்லது கடித்து மீசை படபடென்றே துடிக்கக்
கல்லினும் வலிய நெஞ்சங் காட்டியே யுருட்டி நோக்கி
எல்லினும் கரியமேனி யெமபடர் வரினுமென்னை
ஒல்லையில் தாரகாரி ஓம் ஐம் ரீம் வேல் காக்க. 21

மண்ணிலும் மரத்தின்மீதும் மலையிலும் நெருப்பின் மீதும்
தண்ணிறை சலத்தின் மீதும் சாரிசெய் யூர்திமிதும்
விண்ணிலும் பிலத்தினுள்ளும் வேறெந்தவிடத்துமென்னை
நண்ணிவந்தருளார் சஷ்டி நாதன் வேல் காக்க காக்க. 22

யகரமேபோல் சூலேந்து நறும்புயன் வேல்முன் காக்க
அகரமே முதலாம் ஈராறு அம்பகன் வேல்பின் காக்க
சகர மோடாறு மானோன் தன்கைவேல் நடுவிற் காக்க
சிகரமின் தேவமோலி திகழைவேல் கீழ் மேல் காக்க. 23

ரஞ்சிதமொழி தேவானை நாயகன் வள்ளி பங்கன்
செஞ்சயவேல் கிழக்கில் திறமுடன் காக்க அங்கி
விஞ்சிடு திசையின் ஞானவீரன் வேல்காக்க தெற்கில்
எஞ்சிடாக்கதிர் காமத்தோன் இகலுடைக்கரவேல் காக்க. 24

லகரமேபோல் காளிங்கனல் லுடனெளிய நின்று
தகரமர்த்தனமே செய்த சங்கரி மருகன் கைவேல்
நிகழெனை நிருதிதிக்கில் நிலைபெறக்காக்க மேற்கில்
இகலயில் காக்க வாயுவினில் குகன் கதிர்வேல் காக்க. 25

வடதிசைதன்னில் ஈசன்மகன் அருள் திருவேல் காக்க
விடையுடை ஈசன் திக்கில் வேதபோ தகன் வேல் காக்க
நடக்கையில் இருக்கு ஞான்றும் நவில்கையில் நிமிர்கையில் கிழ்க்
கிடக்கையில் தூங்கு ஞான்றும் கிரிதுளைத் துளவேல் காக்க. 26

இழந்துபோகாத வாழ்வை ஈயுமுத்தையனுர் கைவேல்
வழங்குநல்லூண் உண்போதும்மால் விளையாட்டின் போதும்
பழஞ்சுரர் போற்றும் பாதம் பணிந்து நெஞ்சடக்கும்போதும்
செழுங்குணத்தோடேகாக்க திடமுடன் மயிலும் காக்க. 27

இளமையில் வாலிபத்தில் ஏறிடு வயோதிகத்தில்
வளர் அறுமுகச் சிவன்தான் வந்தெனைக் காக்க காக்க
ஒளியெழு காலைமுன் எல் ஓம்சிவசாமி காக்க
தெளிநடு பிற்பகற்கால் சிவகுருநாதன் காக்க. 28

இறகுடைக் கோழித்தோகைக்கிறை முன் இராவிற் காக்க
திறலுடைச் சூர்ப்பகைத்தே திகழ்பின் இராவிற்காக்க
நறவுசேர் தாள் சிலம்பன் நடுநிசி தன்னிற் காக்க
மறைதொழு குழகன் எங்கோன் மாருது காக்க காக்க. 29

இனமெனத் தொண்டரோடும் இணக்கிடும் செட்டி காக்க
தனிமையில் கூட்டந்தன்னில் சரவணபவனுர் காக்க
நனியனுபூதி சொன்ன நாதர்கோன் காக்க இத்தைக்
கனிவோடு சொன்ன தாசன் கடவுள்தான் காக்கவந்தே. 30

---



---

# சூரிய கவசம்

அஸ்ய ஸ்ரீ ஸூர்ய கவச மந்திரஸ்ய அகஸ்திய பகவான் ரிஷி: அனுஷ்டுப் சந்த : சூர்யோ தேவதா ||

ஸ்ரீம்—பூஜம் ணீம்—சக்தி : ஸம்—கீலகம், மம சூர்ய பிரசாத ஸித்தியர்த்தே ஜபே விநியோக :

| | கரன்யாஸம் | | அங்கன்யாஸம் | |
|---|---|---|---|---|
| ஹ்ராம் | அங்குஷ்டாப்யாம் நம : | | ஹ்ருதயாய நம : | |
| ஹ்ரீம் | தர்ஜநீப்யாம் | ,, | சிரஸேஸ்வஹா | ,, |
| ஹ்ரூம் | மத்யமாப்யாம் | ,, | சிகாயை வஷட் | ,, |
| ஹ்ரைம் | அனுமிகாப்யாம் | ,, | கவசாய ஹூம் | ,, |
| ஹ்ரௌம் | கனிஷ்டிகாப்யாம் | ,, | நேத்ரத்ரயாய வௌஷட் | ,, |
| ஹ்ர : | கரதலகரபிருஷ்டாப்யாம் | | அஸ்திராய பட் | ,, |

பூர்புவஸ்ஸுவரோமிதி திக்பந்த :

லம் இத்யாதி பஞ்ச பூஜா.

தியானம் : ஜபாகுஸும ஸங்காசம் த்விபுஜம் பத்மஹஸ்தம் ஸிந்தூராம்பர மால்யஞ்ச ரக்த கந்தானுலேபனம்.

மாணிக்ய ரத்ன கசித ஸர்வாபரண பூஷிதம் ஸப்தாஸ் வரத வாஹந்து மேரும் யாந்தம் ப்ரதக்ஷிணம் தேவாசுர நரைர் வந்த்யம் முனிபி : பரிஸேவிதம் த்யாயேத்

ஸூர்யம் ஸுவர்ணபம்

ஸூர்யஸ்ய கவசம் படேத் ||

க்ருணி : பாது

சிரோதேசம் ஸூர்ய : பாது லலாடகம், ஆதித்யோ லோசனே பாது ஸ்ருதிம்பாது திவாகர :

க்ராணம் பாது ஸதாபானு : முகம்பாது ஸதாரவி : ஜிஹ்வாப் பாது ஜகன் நேத்ர : கண்டம்பாது விபாவஸு :

ஸ்கந்தௌ க்ருஹபதி : பாது பூஜௌ பாது ப்ரபாகர : கரா வப்ஜகர : பாது ஹ்ருதயம் பாது பானுமான் மத்யஞ்ச பாது ஸப் தாஸ்வ : நாபிம்பாது நபோமணி :

த்வாதசாத்மா கடிம்பாது ஸவிதா பாது ஸக்தினீ உருபாது ஸுரஸ்ரேஷ்ட : ஜானுனிபாது பாஸ்கர :

ஜங்கமே பாது மார்த்தாண்ட : குல்பௌ பாது த்விஷாம்பதி : பாதௌ தினமணி : பாது பாது மித்ர அகிலம் வபு :

ஆதித்ய கவசம் புண்யம் அபேத்யம் வஜ்ரஸன்னிபம் ஸர்வ ரோக பயாதிப்ய : முச்யதே நாத்ர ஸம்ஶய : ஸம்வத்ஸரம் உபஸித்வா ஸாம்ராஜ்ய பதவீம் லபேத் |

அநேக ரத்ன ஸம்யுக்தம் ஸ்வர்ண மாணிக்ய பூஷணம் கல்ப விருக்ஷ ஸமாகீர்ணம் கதம்ப குஸுமப்ரியம் |

அசேஷ ரோக சாந்த்யர்த்தம் த்யாயேத் ஆதித்ய மண்டலம்|

ஸிந்தூர வர்ணாய ஸுமண்டலாய ஸுவர்ண ரத்னாபரணாய துப்யம் பத்மாபி நேத்ராய ஸுபங்க ஜாய பிருஹ்மேந்திர நாராயண ஶங்கராக்ய|

ஸம்ரக்த சூர்ணம் ஸ்வர்ணதோயம் ஸகுங்குமாபம் ஸகுஶம் ஸபுஷ்பம் ப்ரதத்த மாதாய ச ஹேமபாத்ரே ஸஹஸ்ரகோ மே பகவன் ப்ரஸித ||

மற்றொரு சூரிய கவசம்

யாக்ஞவல்கிய முனிவர் அருளிய ஸ்தோத்திரம் இது. பக்தன் தன் உடலின் ஒவ்வொரு அங்கங்களையும் குறிப்பிட்டு, அதனை சூரியன் காக்க வேண்டும் என்று வேண்டும் ஸ்துதி.

சூரியனுக்குரிய எருக்கிலையில் சூரிய கவச ஸ்துதியை எழுதி அதனை கையில் தரித்துக்கொள்வது அருணன் அருளைத் தரவல்லது.

ச்ருணுஷ்வ முனிஸார்த்தூல ஸூர்யஸ்ய கவசம் சுபம்
சரீராரோக்யம் திவ்யம் சர்வ ஸௌபாக்ய தாயகம் ||
தேதிப்யமான முகுடம் ஸ்புரன மகர குண்டலம்
த்யாத்வா ஸஹஸ்ரகிரணம் ஸ்தோத்திர மேதத் உதீரயேத் ||
சிரோ மே பாஸ்கர : பாது லலாடம் மே அமிதத்யுதி ;
நேத்ரே தினமணி : பாது சிரவணே வாஸரேஸ்வர :||
க்ராணம் கர்மக்ருணி : பாதுவதனம் வேதவாஹன :
ஜிஹ்வாம் மே மானத : பாது கண்டம் மே ஸுரவந்தித :||
ஸ்கந்தௌ ப்ரபாகர : பாதுவக்ஷ : பாது ஜனப்பிரிய :
பாதுபாதௌ த்வாதசாத்மா ஸர்வாங்கம் ஸகலேச்வர :||
ஸூர்யாக்ஷாத்மகம் ஸ்தோத்ரம் லிகித்வா பூர்ஜபத்ரகே
ததாதிய : கரேதஸ்ய வசகா : ஸர்வ சித்தயே :||
ஸுஸ்நாதோ யோஜபேத் ஸம்யக் யோதீதே ஸ்வஸ்த
மானஸ :||
ஸரோக முக்தோ தீர்க்காயு : ஸுகம் புஷ்டிம் ச விந்ததி :||

## சூரிய தரிசனம்

காலை வேளையில், மேகங்களால் மூடப்பட்டுள்ள சூரியனை, முகம் காட்டும்படி வேண்டுதல்.

ராகம்-பூபாளம்

சுருதி யின்கண் முனிவரும் பின்னே
தூமொ ழிப்புல வோர்பலர் தாமும்
பெரிது நின்றன் பெருமையென் றேத்தும்
பெற்றி கண்டுனை வாழ்த்திட வந்தேன்;
பரிதி யேபொருள் யாவிற்கு முதலே.
பானுவே, பொன்செய் பேரொளித் திரளே,
கருதி நின்னை வணங்கிட வந்தேன்;
கதிர்கொள் வாண்முகம் காட்டுதி சற்றே.

## சூரிய ஸ்துதி

என்ற னுள்ளங் கடலினைப் போலே
எந்த நேரமும் நின்னடிக் கீழே
நின்று தன்னகத் தொவ்வொ ரணுவும்
நின்றன் ஜோதி நிறைந்தது வாகி
நன்று வாழ்ந்திடச் செய்குவை யையா,
ஞாயிற் றின்கணொளி தரும் தேவா!
மன்று வானிடைக் கொண்டுல கெல்லாம்
வாழ நோக்கிடும் வள்ளிய தேவா!

—பாரதியார்

## திருநீறு அணியும் முறை

பக்தியொடு சிவசிவா என்று திருநீற்றைப்
பரிந்து கையால் எடுத்துப்
பாரினில் விழாதபடி அண்ணாந்து செவியொடு
பருத்த புயமீது ஒழுக
நித்தமும் விரல்களால் நெற்றியில் அழுந்தல்உற
நினைவாய்த் தரிப்பவர்க்கு
நீடுவினை அணுகாது தேக பரிசுத்தமாம்
நீங்காமல் நிமலன் அங்கே
சக்தியோடு நித்தம் விளையாடுவன் முகத்திலே
தாண்டவம் செய்யும் திரு
சஞ்சலம் வராது பரகதிஉதவும் இவரையே
சக்தியும் சிவன் என்னலாம்
மத்தினிய மேருஎன வைத்து அமுதினைக்கடையும்
மால் மருகனான முருகா
மயிலேறி விளையாடும் குகனே புல்வயல் நீடு
மலைமேவு குமரேசனே.

—குருபாததாசர்

# சிவ கவசம்

இந்தக் கவசம் பத்திராயு வென்னும் இராசகுமாரனுக்கு விடய முனி அருளிச்செய்ததென நைமிசாரணிய முனிவருக்குச் சூதமகா முனிவர் அநுக்கிரகித்தது.

பங்கயத் தவிசின் மேலி யிருந்துடற் பற்று நீங்கி
யங்குநற் பூத சுத்தி யடைவுடன் செய்த பின்னர்க்
கங்கையைத் தரித்த சென்னிக் கற்பக தருவைச் செம்பொற்
கொங்கைவெற் பனைய பச்சைக்கொடியொடு முளத்தில்வைத்தே.

அகிலநா யகனாய் ஞான வானந்த ரூபி யாகித்
துகடரு மணுவாய் வெற்பின் றேற்றமா யுயிரை யெல்லாந்
தகவுட னவனி யாகித் தரிப்பவ னெம்மை யிந்த
மகிதல மதனிற் றீமை மருவிடா தருளிற் காக்க

குரைபுன லுருவங் கொண்டு கூழ்தொறும் பயன்க ணல்கித்
தரையிடை யுயிர்கள் யாவுந் தளர்ந்திடா வண்ணங் காப்போ
னிரைநிரை முகில்க ளீண்டி நெடுவரை முகட்டிற் பெய்யும்
விரைபுன லதனுள் வீழ்ந்து விளிந்திடா தெம்மைக் காக்க.

கடையுகந் தன்னி லெல்லா வுலகமுங் கடவுட் டீயா
னடலைசெய் தமலை தாள மறைதர நடிக்கு மீச
னிடைநெடு வலைதா பத்தி லெரிதரு சூறைக் காற்றிற்
றடைபடா தெம்மை யிந்தத் தடங்கட லுலகிற் காக்க.

தூயகண் மூன்றி னோடு சுடரும் பொன் வதன நான்கும்
பாயுமான் மழுவி னோடு பகர்வர தாபயங் கண்
மேயதிண் புயங்க ணான்கு மிளிருமின் னனைய தேசு
மாயதற் புருட னெம்மைக் குணதிசை யதனிற் காக்க.

மான்மழு சூலந் தோட்டி வனைதரு மக்க மாலை
கூன்மலி யங்கு சந்தீத் தமருகங் கொண்ட செங்கை
நான்முக முக்க ணீல நள்ளிருள் வருணங் கொண்டே
ஆன்வரு மகோர மூர்த்தி தென்றிசை யதனிற் காக்க.

திவண்மறி யக்க மாலை செங்கையோ ரிரண்டுந் தாங்க
அவர்தரு மிரண்டு செங்கை வரதத்தோ டபயந் தாங்கக்
கவினிறை வதன நான்குங் கண்ணொரு மூன்றுங் காட்டுந்
தவளமா மேனிச் சத்தியோ சாதன்மேற் றிசையிற் காக்க.

கறைகெழு மழுவு மானு மபயமும் கண்ணி னுமம்
அறைதரு தொடையுஞ் செய்ய வங்கைக நான்கு மேந்திப்
பொறைகொணான் முகத்து முக்கட் பொன்னிற மேனி யோடு
மறைபுகழ் வாம தேவன் வடதிசை யதனிற் காக்க.

அங்குசங் கபாலஞ் சூல மணிவர தாபயங்கள்
சங்குமான் பாச மக்கந் தமருகங் கரங்க ளேந்தித்
திங்களிற் றவன மேனி திருமுக மைந்தும் பெற்ற
எங்க ளீசான தேவ னிருவிசும் பெங்குங் காக்க.

சந்திர மவுலி சென்னி தனிநுதற் கண்ண னெற்றி
மைந்துறு பகன்கண் டொட்டோன் வரிவிழி யகில நாதன்
கொந்துணர் நாசி வேதங் கூறுவோன் செவி கபாலி
அந்தில்செங் கபோலந் தூய வைம்முகன் வதன முற்றும்

வளமறை பயிலு நாவ னுமணி நீல கண்டன்
களமடு பினுக பாணி கையிணை தரும வாகு
கிளர்புயந் தக்கன் யாகங் கொடுத்தவன் மார்பு தூய
ஒளிதரு மேரு வில்லி யுதரமன் மதனைக் காய்ந்தோன்

இடையிப முகத்தோன் ருதை யுந்திநம் மீசன் மன்னும்
புடைவள ரறைகு பேர மிந்திரன் பொருவில் வாமம்
படர்சக தீசன் சானு பாய்தரு மிடபகேது
மிடைதரு கணைக்கா லெந்தை விமலன்செம் பாதங் காக்க.

வருபகன் முதல்யாமத்து மகேசன்பின் னிரண்டாம் யாமம்
பொருவறு வாம தேவன் புகன்றிடு மூன்றும் யாமஞ்
செருமலி மழுவா ளங்கைத் திரியம்பக னுலாம் யாமம்
பெருவலி யிடப வூர்தி பிணியற வினிது காக்க

கங்குலின் முதல்யா மத்துக் கலைமதி முடித்தோன் காக்க
தங்கிய விரண்டாம் யாமஞ் சானவி தரித்தோன் காக்க
பொங்கிய மூன்றும் யாமம் புரிசடை யண்ணல் காக்க
பங்கமி னுலாம் யாமம் கௌரிதன் பதியே காக்க.

அனைத்துள கால மெல்லா மந்தகற் கடிந்தோ னுள்ளந்
தனிப்பெரு முதலாய் நின்ற சங்கரன் புறமுந் தானு
வனப்புறு நடுவுந் தூய பசுபதி மற்று மெங்கு
நினைத்திடற் கரிய நோன்மைச் சதாசிவ நிமலன் காக்க.

நிற்புழிப் புவன நாத னேகுழி நிமல மேனிப்
பொற்பிர மதாதி நாத னிருப்புமிப் பொருவி லாத
அற்புத வேத வேத்ய னருந்துயில் கொள்ளு மாங்கட்
டற்பர சிவன் வழிக்குச் சாமள ருத்ரன் காக்க.

மலைமுதற் றுருக்கந் தம்மிற் பிடரிகாத் திடுக மன்னுஞ்
சிலைவலி வேட ரூபன் செறிந்தகா னகத்திற் காக்க
கொலை யமர்கற் பத்தண்ட கோடிகள் குலுங்க நக்குப்
பலபடி நடிக்கும் வீர பத்திரன் முழுதுங் காக்க.

பல்லுளைப் புரவித் திண்டேர் படுமதக் களிறு பாய்மா
வில்லுடைப் பதாதி தொக்கு மிடைந்திடு மெண்ணில் கோடி
கொல்லியன் மாலை வைவேற் குறுகலர் குறுகுங் காலை
வல்லியோர் யங்கன் செங்கை மழுப்படை துணித்துக் காக்க.

தத்துநீர்ப் புணரி யாடைத் தரணியைச் சுமந்து மானப்
பைந்தலை நெடிய பாந்தட் பஃறலை யணைத்துத் தேய்ந்து
முத்தலை படைத்த தொக்கு மூரிவெங் கனல்கொள் சூலம்
பொய்த்தொழிற் கள்வர் தம்மைப் பொருதழித் தினிது காக்க

முடங்குளை முதலாயுள்ள முழுவலிக் கொடிய மாக்கள்
அடங்கலும் பிளுகங் கொல்க வென்றிவை யணைத்து முள்ளந்
திடம்பட நினைந்து பாவஞ் செயுஞ்சிவ கவசந் தன்னை
யுடன்படத் தரிப்பை யானு லுலம்பெரு குலவுத் தோளாய்.

பஞ்சபாத கங்கள்போம் பகைக்கண் மாய்ந்திடும்
அஞ்சலின் மறலியு மஞ்சியாட் செயும்
வஞ்சநோ யொழிந்திடும் வறுமை தீர்ந்திடுந்
தஞ்சமென் றிதனைநீ தரித்தல் வேண்டுமால்.

## திருமங்கை ஆழ்வார் அருளிச்செய்த

# நாராயணா என்னும் நாமம்

## பெரிய திருமொழி

வாடினேன்; வாடி; வருந்தினேன் மனத்தால்;
பெருந் துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன்; கூடி, இளையவர்—தம்மோடு
அவர் தரும் கலவியே கருதி
ஓடினேன்; ஓடி, உய்வது ஓர் பொருளால்
உணர்வு எனும் பெரும் பதம் திரிந்து,
நாடினேன்; நாடி, நான் கண்டுகொண்டேன்—
நாராயணா என்னும் நாமம்.

ஆவியே! அமுதே! என நினைந்து உருகி,
அவர்அவர் பணை முலை துணையாப்
பாவியேன் உணராது, எத்தனை பகலும்
பழுதுபோய் ஒழிந்தன நாள்கள்;

தூவி சேர் அன்னம் துணையொடு புணரும்
சூழ் புனல் குடந்தையே தொழுது, என்
நாவினுல் உய்ய நான் கண்டுகொண்டேன்—
நாராயணு என்னும் நாமம்.

சேமமே வேண்டி, தீவினை பெருக்கி,
தெரிவைமார் உருவமே மருவி,
ஊமனுர் கண்ட கனவிலும் பழுது ஆய்,
ஒழிந்தன கழிந்த அந் நாள்கள்;
காமனுர் தாதை, நம்முடை அடிகள்,
தம் அடைந்தார் மனத்து இருப்பார்
நாமம் நான் உய்ய, நான் கண்டுகொண்டேன்—
நாராயணு என்னும் நாமம்.

வென்றியே வேண்டி, வீழ் பொருட்கு இரங்கி,
வேல்கணுர் கலவியே கருதி,
நின்றவா நில்லா நெஞ்சினை உடையேன்
என் செய்கேன்! நெடு விசும்பு அணவும்
பன்றி ஆய் அன்று பாரகம் கீண்ட
பாழியான், ஆழியான் அருளே
நன்று நான் உய்ய, நான் கண்டுகொண்டேன்—
நாராயணு என்னும் நாமம்.

கள்வனேன் ஆனேன்; படிறு செய்து இருப்பேன்;
கண்டவா திரிதந்தேனேலும்,
தெள்ளியேன் ஆனேன்; செல் கதிக்கு அமைந்தேன்;
சிக்கெனத் திருவருள் பெற்றேன்;
உள் எலாம் உருகிக் குரல் தழுத்து ஒழிந்தேன்:
உடம்பு எலாம் கண்ண நீர் சோர,
நள் இருள் அளவும், பகலும், நான் அழைப்பன்—
நாராயணு என்னும் நாமம்.

எம்பிரான், எந்தை, என்னுடைச் சுற்றம்,
எனக்கு அரசு, என்னுடை வாழ்நாள்,
அம்பினுல் அரக்கர் வெருக்கொள நெருக்கி,
அவர் உயிர் செகுத்த எம் அண்ணல்;
வம்பு உலாம் சோலை மா மதிள் தஞ்சை
மா மணிக் கோயிலே வணங்கி,
நம்பிகாள்! உய்ய நான் கண்டுகொண்டேன்—
நாராயணு என்னும் நாமம்.

இல்-பிறப்பு அறியீர், இவர் அவர் என்னீர்,
இன்னது ஓர் தன்மை என்று உணரீர்,
கற்பகம்! புலவர் களைகண்! என்று உலகில்
கண்டவா தொண்டரைப் பாடும்
சொல் பொருள் ஆளீர்! சொல்லுகேன், வம்மின்:
சூழ் புனல் குடந்தையே தொழுமின்;
நல் பொருள் காண்மின்; பாடி நீர் உய்மின்—
நாராயணா என்னும் நாமம்.

கற்றிலேன் கலைகள்; ஐம்புலன் கருதும்
கருத்துளே திருத்தினேன் மனத்தை;
பெற்றிலேன் அதனால் பேதையேன் நன்மை;
பெரு நிலத்து ஆர் உயிர்க்கு எல்லாம்
செற்றமே வேண்டித் திரிதர்வேன்; தவிர்ந்தேன்;
செல் கதிக்கு உய்யும் ஆறு எண்ணி,
நல் துணை ஆகப் பற்றினேன், அடியேன்—
நாராயணா என்னும் நாமம்.

குலம் தரும்; செல்வம் தந்திடும்; அடியார்
படு துயர் ஆயின எல்லாம்
நிலம் தரம் செய்யும்; நீள் விசும்பு அருளும்;
அருளொடு பெரு நிலம் அளிக்கும்;
வலம் தரும்; மற்றும் தந்திடும்; பெற்ற
தாயினும் ஆயின செய்யும்;
நலம் தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன்—
நாராயணா என்னும் நாமம்.

மஞ்சு உலாம் சோலை வண்டு அறை மா நீர்
மங்கையார் வாள் கலிகன்றி
செஞ்சொலால் எடுத்த தெய்வ நல் மாலை
இவை கொண்டு சிக்கென, தொண்டீர்!
துஞ்சும்போது அழைமின்; துயர் வரில், நினைமின்;
துயர் இலீர் சொல்லிலும் நன்று ஆம்;
நஞ்சு-தான் கண்டீர் நம்முடை வினைக்கு—
நாராயணா என்னும் நாமம்.

# ஸ்ரீ ஹரி கவசம்

### தும்பிக்கையாழ்வார் துதி

அரிகவசம் சொல்ல அருள்மாலை சூடி
பெருகுந் தமிழ்வெள்ளம் பெருகுமே—ஒருகருணை
சொற்பதத்தி லுற்பவித்த பொற்பதத்தி லானைமுகக்
கற்பகத்தைக் கை தொழுதக் கால்.

### கவசம்

ஆதியனாதி ஆதிபராபரம்
ஆதிமூலத்தி லாதிபரபிரமம்
அரியெனும் மந்திரம் அனுதினநினைப்பவர்
இருள்வினை யெல்லாம் எரிதணலாய்விடும்
பரமகுருபரம் பரமஉபதேசம்
அருமறை மொழியெலா மங்கேஉதித்திடும்
உலகுபிறந்திடம் ஓங்காரமானிடம்
பலகலைதத்துவம் பலவுஞ்சமைந்திடம்
ஆதாரமாறுமாய் அப்பால்வெளியுமாய்
ஆதாரமாறுக்கும் ஆதாரமானதாய்
உச்சிமேல்வட்டமாய் உதித்தருள்கோலமாய்
சச்சிதானந்தமாய் சகலமும்சமனாய்
பஞ்சபூதங்களாய் பகலுமிரவுமாய்
பஞ்சபூதங்களைப் படைத்ததலைவனாய்
மனமும் வெளியுமாய் மறப்பும் திறப்புமாய்
தினமுமனமுமாய் சிவமுமாகினேன்
இடகலை பிங்கலை இரு நான்தோர்கலை
நடுவணை சுழிமுனை நடக்குமோர்கலை
நாலாயிரத்தோ டோராயிரங்கல்
பேராயித்தாளன் பெருமைஉரிமையாய்
ஐவரருள்வாய் ஐவற்குறுதியாய்
கைவல்லியமான கமலாலயத்துள்ளே
திருவாயுருவாய் தெளிவாய்குருவாய்
அருளாய் கோலாய் கலமாய் அணைவராய்
வானவர் முனிவர் மனோகரமான
தீனதயாபரன் தேவர் திருமால்
தொண்டர்க்கெளியவன் தொண்டர்க்கருத்தா
புண்டரீகாக்ஷன் பூரணபுருஷன்
கருணைபொழியுங் கருணையுடையோன்
கிருஷ்ணவடிவாய் செதியும்பதியாய்

வைகுண்டத்தினில் வாழுமரசன்
மெய்யென்பவற்குள் மெய்யாயிருப்பவன்
அம்பத்தோரக்ஷர மாகியனந்தா
இன்பத்துறந்தே யிருக்குஞ்சோதி
வண்ணநெடுமால் மலரடி சரணம்
கண்ணுள்தெளிவே கண்ணே சரணம்
ஓரெட்டருள்வாய் உபதேசித்த
ஓரெட்டுகுருவே உலவே சரணம்
தத்துவந்தொண்ணூற் றுரினுக்கெட்டா
தத்துவ முடிவே சரணம் சரணம்
சரணமென்பவர்க்குள் தாண்டவமாடும்
சரணக்கமலஞ் சரணஞ்சரணம்
சிந்தையில் நினைந்தவர் சிந்தையில் மகிழ்வர்
திந்திமிதிமிதிமி திகதிமிதிமியென
செயந்தரி செகுந்தரி செமந்தரிசெயென
மந்தரபூஷண மந்தரபாஷண
நாதகீதத்துடன் நாதநாதாந்தமாய்
வேதகோஷ்டங்களும் வேதசாஸ்திரமுடன்
முடிவின் முடிவின் முகத்தாமரையின்
வடிவின் திருமண் ணற் சாந்தழகும்
இரவியுமதியும் இருநயனமுமாய்
மருவிடுகுழையும் மகரகுண்டலமும்
சிறுநகைவிதழும் செவ்வாய்மொழியும்
கிருபைவிளங்க கிரீடமசைய
கண்டசரங்களும் கண்டாபரணமும்
கண்டம்நிறைந்த கனகபூஷணமும்
சதுர்புசத்தழகும் சங்குசக்கரமும்
பொற்பதநிறைந்த பொற்கற்பதமும்
கிலேசமறுக்குங் கேதையுங்குலுங்க
விலாசமுடனே விலாசமுடையோன்
சாமளமேனியான் தகதக்தகன்ன
கோமளங்கொஞ்ச கோலமுன்னூலான்
செந்திருமார்பும் ஸ்ரீலட்சுமியுடன்
சுந்தரமுடையோன் துள்சிமாலிகையும்
வாணியுமயனும் வளர்திருவுந்தியும்
வாணியுமயனும் வாழ்த்திருமார்பும்
பீதாம்பரமும் பிரகாசம்விளங்க
பாதாம்புயமலர் பத்மசிங்காரமும்
கலகலகலென்ன காரணமின்ன
மலரடிமின்ன மாதவமின்ன

வெண்ணெயுண்டளித்த வெண்கரமின்ன
அன்னல் திருமால் அடிமைமுன்னாக
வருக வருக மாயோன் வருக
அடியெட்டெழுத்தா லமர்ந்தவன் வருக
கண்ணன் கமலக் கண்ணன் வருக
வண்ணன் தாமோதரன் வருக
விதுரன்கையில் வில்லை முறித்து
சதுரெனவடிவாய் சயனன் வருக
பாண்டவர்க்காக பரிவுடன் தூது
சென்றுண்டருள் ஆதிமூலம் வருக
வருகவென்று மாமலர்த்தூவி
உருகியழைக்க ஒருரைக்கிரங்கி
பக்ஷிவாகனமும் பரிவுடனேறி
ரட்சித்தருளும் லக்ஷணமுடனே
வந்து வந்து மதுசூதனனாயென்
சிந்தைதெளிய தெரிசனங்காட்டி
கண்டுபணிய கதிர்கண்கொடுத்துன்
புண்டரீகாக்ஷப் பூரணமுடனே
நீயுங்காட்டி நானுங்காட்டி
நீயாகிநின் நிலையுங்காட்டி
நாதங்காட்டி வேதங்காட்டி
நாதநாதாந்தத்துள் நடனங்காட்டி
இகமுங்காட்டி பரமுங்காட்டி
யிறப்பிறப்பில்லா இடமுங்காட்டி
உடலுங்காட்டி உயிருங்காட்டி
உடலுமுயிரும் உற்பவங்காட்டி
தானவனான தத்துவமுங்காட்டி
புவனமனைத்தும் பொருந்தக்காட்டி
யோகங்காட்டி ஞானங்காட்டி
ஆகமமெல்லா மறியக்காட்டி
ஆறுதாரத் தடுக்குங்காட்டி
வேறாய்நின்ற வெளியுங்காட்டி
தெளிவுங்காட்டி ஒளிவுங்காட்டி
அதுவாகிநின்ற ஆனந்தங்காட்டி
ஆயுங்கலைகள் அறுபத்துநான்கும்
பாயுமறையும் பயனுங்காட்டி
உள்ளுங்காட்டி புறமுங்காட்டி
உள்ளும்புறம்புமா யொன்றாய்க்காட்டி
ஒன்றாய்நின்ற உருவங்காட்டி

மனதிலாடும் மவுனங்காட்டி
பிறப்புமிறப்பும் பிறவுங்காட்டி
பிறப்பிறப்பில்லாப் பேரின்பங்காட்டி
சத்துங்காட்டி சித்துங்காட்டி
நித்தம்பராபரம் பிரமங்காட்டி
எல்லாங்காட்டி என்னுள்ளிருந்து
எல்லாந்தானுய் எனக்கறிவித்து
ஓரெட்டெழுத்தில் உற்பவமெல்லாம்
ஓரெட்டெழுத்தால் உணர்ந்திடஉதவி
அரிபதஞ்சேர அருள்தந்தருளி
யிருள்வினை நீக்கியுன் திருவருளுருவே
தினம்தினமறவாப் பரவசங்கொடுத்து
பாவித்திடவருள் சிரந்தனில்
தாமோதரன் காக்கஉரத்தமயிர்
புருஷோத்தமன் காக்க
நெற்றியில்நெடுமால் நிலையுடன்காக்க
கத்திபுருவம் சுயம்பவேகாக்க
வியன்கண்ரெண்டும் விஷ்ணுவேகாக்க
தயங்கும் பொறி மதுசூதனன்காக்க
நாரணன்கேசவன் நாசியில்காக்க
ஆரணன்வாக்கில் அமர்ந்தேகாக்க
திரிவிக்கிரமன் செவியில்காக்க
குறித்தமுகமும் கோலாகலன்காக்க
கண்டமலர் செங்கண்ணன்காக்க
திண்டரிதோளில் சீதரன்காக்க
வாசுதேவன் மார்பினில்காக்க
வீசும்பிடரி விலாசனேகாக்க
நாசியில் பத்மநாபனேகாக்க
தூசிடுவயிறு பரஞ்சோதிகாக்க
மூலத்திலாதி மூலங்காக்க
ஞாலத்தினிட நரசிம்மங்காக்க
இருகரம் இருடி கேசவன்காக்க
அரிஅங்குசத்தில் அடைவுடன்தாக்க
துடைகள்ரெண்டுஞ் சுதனேகாக்க
நடையுட்சரணம் நாரணன்காக்க
கணுக்கால்விரல் கண்ணன்காக்க
நன்நடுவணை வேதாந்தங்காக்க
உடலுயிர்தனை உலகுண்டோன்காக்க
திடமுடன்ரூபம் செங்கண்மால்காக்க

சுழிமுனையதனை முசுகந்தன் காக்க
எழிசர்வாங்கமும் மீசன்காக்க
காக்ககாக்க என்னவேகருத்தா
யிருந்துங்காக்க நித்தமுங்காக்க
எட்டெழுத்திசையும் இருந்தேகாக்க
வட்டமனத்தும் மகிழ்ந்தேகாக்க
கவசம் நினைய காலனைக் கடிய
கவசமணியக் கவசங்காக்க
குருஉபதேசங் குறியாலுரைத்து
அரிகவசத்தை யாதாமொருவர்
கற்றோர்கேட்டோர் கவசமணிந்தோர்
நித்தம்நினைத்தோர் நெஞ்சில்வைத்தோர்
வானவர்நாடும் ஞானமுமுண்டாய்
தானவனுயருள் சாறுவர்மோக்ஷம்.

ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்

அருளிச் செய்த

## சகல கலாவல்லி மாலை

வெண்டா மரைக்கன்றி நின்பதந் தாங்கவென்—வெள்ளையுள்ளத்
தண்டா மரைக்குத் தகாதுகொ லோ? சக மேழுமளித்
துண்டா னுறங்க ஒழித்தான்பித் தாகவுண் டாக்கும் வண்ணம்
கண்டான் சுவைகொள் கரும்பே! சகல கலா வல்லியே!

நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்
பாடும் பணியிற் பணித்தருள் வாய்; பங்கய யாசனத்திற்
கூடும் பசும்பொற் கொடியே! கனதனக் குன்றுமைம்பாற்
காடுஞ் சுமக்கும் கரும்பே! சகல கலா வல்லியே!

அளிக்குஞ் செந்தமிழ்த் தெள்ளமு தார்ந்துன்னருட் கடலிற்
குளிக்கும்படிக்கென்று கூடுங்கொ லோ? உளம்—கொண்டு [தெள்ளித்
தெளிக்கும் பனுவற் புலவோர் கவிமழை சிந்தக்கண்டு
களிக்கும் கலாப மயிலே! சகல கலாவல்லியே!

தூக்கும் பனுவற்றுறை தோய்ந்த கல்வியுஞ் சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள் வாய்; வட நூற்கடலும்
தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமுந் தொண்டர்செந் நாவினின்று
காக்கும் கருணைக் கடலே! சகல கலாவல்லியே!

பஞ்சப் பிதந்தரு செய்யபொற் பாதபங் கேருகமென்
நெஞ்சத் தடத்தல ராததென் னே ? நெடுந் தாட் கமலத்
தஞ்சத்துவச முயர்த்தோன்செந் நாவு மகமும்வெள்ளை
கஞ்சத் துதவிசொத் திருந்தாய் ! சகல கலாவல்லியே !

பண்ணும் பரதமும் கல்வித் தீஞ்சொற் பனுவலும்யான்
எண்ணும் பொழுதெளி தெய்தநல் காய்; எழு தாமரையும்
விண்ணும் புவியும் புனலும் கனலும் வெங் காலுமன்பர்
கண்ணும் கருத்தும் நிறைந்தாய் ! சகல கலாவல்லியே !

பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனுமென்பாற்
கூட்டும் படிநின் கடைக்கண்நல் காய் ; உளங்கொண்டு தொண்டர்
தீட்டுங்கலைத் தமிழ்த் தீம்பால் அமுதந்தெளிக்கும் வண்ணம்
காட்டும்வெள் ளோதிமப்பேடே ! சகல கலாவல்லியே !

சொல்விற் பனமும் அவதான மும்கல்வி சொல்லவல்ல
நல்வித்தை யுந்தத் தடிமைகொள்வாய் ; நளி னுசஞ்சேர்
செவ்விக் கரிதன் றெருகால முஞ்சிதை யாமைநல்கும்
கல்விப் பெருஞ்செல்வப் பேறே ! சகல கலாவல்லியே !

சொற்கும் பொருட்கும் உயிராமெய்ஞ் ஞானத்தின்—தோற்றமென்ன
நிற்கின்றநின்னை நினைப்பவர்யார் ? நிலந்தோறும்புழைக்கை
நற்குஞ் சரத்தின் பிடியோ டரசன்னம் நாணநடை
கற்கும் பதாம்புயத் தாளே ! சகல கலாவல்லியே !

மண்கண்ட வெண்குடைக் கீழா மேற்பட்ட மன்னருமென்
—முதலாம்
பண்கண்ட னவிற் பணியச்செய் வாய்; படைப் போன்—முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடியுண்டேனும் விளம்பினுள்
கண்கண்ட தெய்வ முளதோ ! சகல கலாவல்லியே !

---

## நடராஜர்

தோற்றம் துடியதனில் தோயும் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்பதத்தே உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

— உண்மை விளக்கம்

# சக்தி கவசம்

தேவர்கள் தங்களுக்கு நெடுநாள் இடரிழைத்திருந்த துர்க்க னென்னும் அவுணனை உமாதேவியானவள் சங்கரித்து அவ்விடரை நீக்கியது கண்டு அத்தேவியை வணக்கஞ் செய்து துதி செய்தது இக்கவச மென்றறிக.

அங்கையிற் கரகந் தாங்கும் பிரமாணி யருளி னேடுந்
துங்கமென் சென்னி காக்க வயிணவி துகளி லாகம்
எங்கணுங் காக்க செய்ய வேந்தெழி லுருத்தி ராணி
தங்குமெண் டிசையு மன்பு தழைத்திட வினிது காக்க.

கொன்னுனைச் சூலி சென்னி மயிரினைக் குறித்துக் காக்க
மன்னுவெண் பிறைதாழ் சென்னி வயங்கொளி நெற்றி காக்க
பன்மயிர்ப் புருவ நாளும் பரிவொடு மூமையாள் காக்க.
என்னையாண் முக்க ணீச னிறைவிகண் ணினைகள் காக்க

வயமிகு மிமய வல்லி மூக்கினை மகிழ்ந்து காக்க
செயையொடு விசயை மேல்கீ ழிதழினைச் சிறந்து காக்க
வயிலுடைச் சுருதி தூய வஞ்செவி காக்க தண்ணென்
பயின்மல ருறையுஞ் செல்வி பல்லினை யுவந்து காக்க

சண்டிமென் கபோலங் காக்க தவளநாண் மலரின் வைகும்
ஒண்டொடி நன்னுக் காக்க விசயைமங் கலைமற் றெவ்வாக்
கண்கவர் நாடி காக்க காத்தியா யனியெஞ் ஞான்று
மூண்டக மலரிற் றூய முகத்தினைச் சிறந்து காக்க

காளமுண் டிருண்ட நீல கண்டிமென் கழுத்துக் காக்க
கோளில்பூ தார சத்தி சுவர்புறங் காக்க கூர்மி
நீரொளிச் சந்தி காக்க வயிந்திரி நெறியி னேடுந்
தோளினைக் காக்க பத்மை துணைமல ரங்கை காக்க.

கமலகை விரல்கள் காக்க விரசைகை யுகிர்கள் காக்க
திமிரமுண் டொளிரும் வெய்யோன் மண்டலத் துறையுஞ் செல்வி
எமதிரு வாகு மூலங் காக்கவா னவர்க ளேத்த
அமிர்தல கரி நாணு மகன்மணி மார்பங் காக்க.

தரித்திரி யிதயங் காக்க தயித்தியர்ச் செகுபோண் மிக்க
கருத்தொடு முலைகள் காக்க சகத்தினி லிறைமை பூண்டோ
டிருத்தகு வயிறு காக்க திகழ்தபோ கதிதன் னுள்ளத்
தருத்தியி னுந்தி காக்க வசைவளர் முதுகு காக்க

கருதரு விகடைகாக்க கடிதடம் பாமை வாய்ந்த
குருமணிச் சகனங் காக்க குகாரணி குய்யங் காக்க
வருடரவரும பாய கந்தினி யபானங் காக்க
தெருளுடை விபுலையென்றுஞ் சிறப்புடைக் குறங்கு காக்க

வளிதைமென் முழந்தாள் காக்க வியற்சபை கணைக்கால் காக்க
களிதரு கோரை வாய்ந்த பரட்டினைக் காக்க மிக்க
அளிகொள்பா தலத்திற் செல்வோ ளணிகெழு புறந்தாள் காக்க
ஒளிர்நகம் விரல்கள் சந்திரி யுக்கிரி யுவந்து காக்க

தலத்துறை மடந்தை யுள்ளங் காவிணை காக்க தண்ணென்
மலர்திரு மனையைக் காக்க வயங்குகேத் திரதை யோங்கி
உலப்பில்கேத் திரங்கள் காக்க பிரியகரை யொழிவ ருது
நலந்தகு மக்க டம்மை நன்குறங் காக்க வென்றே.

உயர்சன தனியெஞ் ஞான்று மொழிவறு மாயுள் காக்க
மயர்வறு கீர்த்தி யாவு மாதேவி காக்க மிக்க
செயிரறு தருமம் யாவுந் தனுத்திரி சிறந்து காக்க
இயல்புடைக் குலத்தை வாய்ந்த குலதேவி யினிது காக்க.

சற்கதி பிரதை நல்லோ ரியைபினைத் தயாவிற் காக்க
விற்கொடும் போரி னிரில் வெளியினில் வனத்திற் சூதில்
இற்புற மதனி லோங்கு சர்வாணி காக்க வென்னுப்
பொற்றரு மலர்க டூவிப் புங்கவ ரேத்தி னரே.

---

## ஸரஸ்வதி ஸ்துதி

(அறிவு நலம் பெற)

பிரமசித் தாந்தரூபி பெய்கழல் போற்றி போற்றி
வருநிணை வாற்றல் போற்றி வளர்ஞான சத்தி போற்றி
தெருள்புத்தி சத்தி போற்றி திகழ்பிர திபையே போற்றி
விரிவுறு கற்பனைநற் சத்தியாம் விமலைபோற்றி.

தூயவெள் ளுடையாய் போற்றி துங்கவெண் கமலப்பூவில்
மேயினை போற்றி மெண்மை விரிசபமாலை ஏந்தி
ஆய்தரும் யாழை நாசித தனைவரும் நலம்பெறச்செய்
தாயுயர் சத்துவஞ்சார் தனித்தெய்வ மானுய் போற்றி.

# முடிவுரை

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடி சேராதார். —குறள்

பிறந்து விட்ட. இந்த வாழ்க்கைக் கடலை நீந்திக் கடப்பதற்கும், இனி, ஒருதாயின் கருவில் தோன்றி பிறக்காமலிருப்பதற்கும், மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றினலும், சதா இறைவனேடு ஒன்றி யிருப்பதே சரியான வழியாகும்·

'ஐந்தில் வளையாதது. ஐம்பதில் வளையாது' என்றும் 'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டிலும்' என்றும் நம் நாட்டில் முதுமொழிகள் வழங்கிவருகின்றன. இதற்கேற்ப பிஞ்சு உள்ளங்களில் பசுமரத் தாணி போன்று பதியும் வண்ணம், நல்ல எண்ணங்களையும் செய்கைகளையும் உருவாக்க வேண்டும் என்று, என்னுள்ளத்தில் எழுந்த ஒரு உணர்வின் படைப்பே இந்த 'தெய்வம் பேசுகிறது' என்ற சிறு புத்தகம்.

இந்த சிறிய புத்தகத்தில் ஆறு மதங்களின் தெய்வங்களான கணபதி (காணுபத்யம்), முருகன் (கௌமாரம்), சூரியன் (சௌரம்), விஷ்ணு (வைஷ்ணவம்), சிவன் (சைவம்), பராசக்தி (சாக்தம்) முதலானேர் தங்களைப்பற்றி, தங்களது லீலைகளைப் பற்றி, குழந்தைகளுக்கு, கற்பனைத் தோற்றம் கலக்காத வகையில், நேருக்கு நேர் பேசுவது போன்று, பிஞ்சு உள்ளங்களில் தெய்வ உணர்வுகள் நன்கு பதியும் வண்ணம், என்னுல் முடிந்த வரையில் அமைத்திருக்கிறேன்.

ஏற்கனவே, சிறுவர்களுக்காக நான் எழுதிய. விஷ்ணுவின் மானிட அவதாரமாகிய ராமனைப் பற்றி "ராமன் பேசுகிருன்" என்ற ஒரு சிறு நூலை, பிரதிபா பிரசுரத்தினர் வெளியிட்டனர். ஆனுல் அதற்கு தமிழ் மக்களிடமிருந்து நல்லாதரவு கிடைக்கவில்லை. இருந்தும், இந்தப் புத்தகத்தை அவர்கள் வெளியிடுவது, "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்ற அவர்களது நல்ல நோக்கத்தைக் காட்டுகின்றது.

தெய்வங்கள் தங்களுடைய வரலாறுகளையும், லீலைகளையும் சொல்லுவதோடுமட்டுமல்லாமல், தங்களுடன் ஒன்று கலக்கும் முறையினையும் தெள்ளத் தெளிவாக எடுத்துக் கூறுகின்றனர்.

அருட்செல்வம் பெற்று சிறுவர், சிறுமியர்களுக்கு ஆசிகள். அன்போடு வாழ,

அவ்வழி நின்று, அமரர்கள் போற்றும் பெருவாழ்வு பெற்று, நிலமிசை நீடுவாழ உங்கள் எல்லோர் சார்பிலும் அன்னை பராசக்தியை பணிவன்புடன் இறைஞ்சுகின்றேன்.

இப்புத்தகம் சிறுவர் சிறுமியர்களுக்கு நன்னெறியை ஊட்டுமேயானுல், நான் எழுதியதன் நோக்கம் நிறைவேறியதாகும்.

26-4-82 "நஜன்"
சென்னை-4.

சுபம்






# ஜெய ஹனுமான் அருள் பெற வழி

ஜெய ஹனுமான் சஞ்சீவீ மலையுடன் வால் மேல் நோக்கி பறக்கும் நிலையில் இருப்பதே சாஸ்திர விதி. நமக்கு ஆரோக்கியம், ஆனந்தம், ஐஸ்வர்யம், அமைதி இவைகளைத் தருபவர் ஜெய ஹனுமானே.

இவருடைய படம் மந்திர தந்திர யந்திர சாஸ்திரப்படி கேரள குரு பகவான் அனுக்கிரகத்தால் ஸ்ரீ பஞ்சமுக ஹனுமத் உபாசனையில் ஸித்திபெற்ற மெலட்டூர் ஹனுமான் தாஸ் ஸ்வாமிகளால் வெளியிடப்பட்டுள்ளது. ஸ்ரீ காஞ்சி காமகோடி பெரியவர்கள் இதை அனுக்கிரஹித்திருக்கிறார்கள்.

| | | |
|---|---|---|
| பெரிய படம் | 48 × 35 cm. | விலை ரூ. 6 — 00 |
| சிறிய படம் | 37 × 25 ,, | விலை ரூ 3 — 00 |
| பூஜை புஸ்தகம் | | விலை ரூ. 1 — 00 |

ஸ்திரீ புருஷர் யாவரும் பூஜிக்கலாம். பக்தி சிரத்தை ஆசாரம் வேண்டும். மெலட்டூரிலிருந்து மட்டும் படங்கள் பார்சலில் அனுப்பப்படும் ரூ. 10 M.O. செய்து பெறலாம். 50 படங்களுக்கு குறையாமல் வாங்கினால் 20·/. கமிஷன் உண்டு.



மாந்திரீக சம்பந்தமான சகல தோஷங்களும் நிவர்த்தி செய்யப்படும். அன்பர்கள் தங்கள் குறைகளை கோத்திரம் நாம நக்ஷத்திரம் ராசி முழுவிலாசம் மெலட்டூர் விலாசத்திற்கு எழுத வேண்டும்.

